# துகளறு போதம்

விளக்க உபதேசம் : மகரிஷி ஈஸ்வரபட்டா

தொகுப்பாசிரியர். மரு. இராமசிவா





...தி பதிப்பகம், பாடியநல்லூர், சென்னை – 600 052.

சீர்காழி ஸ்ரீ சிற்றம்பலநாடி சுவாமிகள்
அருளிய

# துகளறு போதம்

(அஞ்ஞானம் நீக்கும் ஞானம்)



விளக்க உபதேசம்

**சற்குரு மகரிஷி ஈஸ்வரபட்டா**
தொகுப்பாசிரியர்
**மருத்துவர். இராம. சிவா**

**கணபதி பதிப்பகம்**
1/349, திருப்பூர்க்குமரன் தெரு,
பாடியநல்லூர், சென்னை - 600 052.

# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | துகளறு போதம் |
| தொகுப்பாசிரியர் | : | மருத்துவர் இராம.சிவா |
| நூற்பொருள் | : | சைவ சித்தாந்த விளக்க உரை |
| மொழி | : | தமிழ் |
| முதற் பதிப்பு | : | 2015 |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| பக்கங்கள் | : | 96 |
| படிகள் | : | 500 |
| அளவு | : | டெம்மி 1/8 |
| கணினி அச்சு | : | பிரியங்கா கிராபிக்ஸ்,<br>பெரம்பூர், சென்னை – 11. |
| வெளியீடு | : | கணபதி பதிப்பகம்<br>எண். 1/349, திருப்பூர்க்குமரன் தெரு,<br>பாடிய நல்லூர், சென்னை – 600 052. |


*************

# பொருளடக்கம்

11-2



"எல்லாம் அவன் செயல்"

# பதிப்புரை

எல்லாம் வல்ல இறையருள் கைகூட்டியதின் விளைவாக இப்பதிப்புரையை வரிசை கிரமத்தில் எழுபத்தி நான்காவது நிலையில் இறைக்கும் இவ்வுலகிற்கும் சமர்ப்பிக்கின்றோம்.

பல்விதமான நூல்களை இப்பதிப்பகம் வெளியிட்டிருந்தாலும் இந்நூலுக்கு தனிச்சிறப்பு உண்டென்றால் அதற்கு இத்தொகுப்பாசிரியர் தன்னை இந்த நூலின் பதிவுகளில் முழுமையாக "தொகுப்பாசிரியர்" என்றே பதிப்பித்திருக்கிறார். தன் குருவிற்கு தன்னை முழுமையாக சமர்ப்பித்து அவருடைய மானசீக மாணாக்கனாகவே தன்னை உணர்ந்து பதிப்பித்திருக்கிறார். "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்ற வாக்கிற்கிணங்க தன் ஆசானாகவும், மானசீக குருவாகவும் விளங்கும் ஸ்ரீமத் ஈஸ்வர பட்டா அவர்கட்கு இந்நூலை உணர்வுப் பூர்வமாக தொகுத்திருக்கிறார்.

இத்தொகுப்பாசிரியர் இதுவரை சமர்ப்பித்த பல நூல்கள் பல பதிப்பகங்கள் மூலம் வெளியிடப்பட்டு இருப்பினும் இந்நூல் கணபதி பதிப்பகத்தின் மூலமாக வெளிவருவதை நாங்கள் செய்த பிறவிப் பயனாகவே கருதுகின்றோம். எல்லாம் வல்ல இறைக்கு ஆசிரியரின் சார்பிலும் நன்றி கூற கடமைப்பட்டுள்ளோம்.

இந்நூல் மூலம் பல தத்துவங்களையும் ஆன்மிக விளக்கங்களையும் எளிமையாகவும் உணரும்படியாகவும் வெளிக்கொணர்ந்திருப்பது தொகுப்பாசிரியரின் காலத்திற்கேற்ற உரையாக கருதுகிறோம். வெளிக் காட்சியாக உணர்ந்ததை உள்முகமாக சிந்திக்கும் திறனை இந்நூல் வெளிப்படுத்தும் என்பதில் ஐயமில்லை.

இந்நூலின் ஆன்மிக கருத்துகளை ஆசிரியருடன் பகிர்ந்து அவரை ஊக்குவிப்பதே இவ்வாசிரியருக்கு நாம் தரும் பெரும் பரிசாக இருக்கும் என்பதுடன் நாம் நம் ஆன்மிக வழிகாட்டிகளாக விளங்கும் பல குருமார்களின் உள்முக ஆராய்ச்சிக்கு உயிர் ஊட்டிக் கொண்டே இருப்பதாக கருதுகிறோம். எங்கள் பலகோடி வணக்கங்களை பணிந்து பல ஆன்மிக குருமார்களுக்கும் நன்றியினை சமர்ப்பித்து மீண்டும் ஒரு வாய்ப்புக்காக காத்திருக்கிறோம்.

இவண்
தங்கள் பணிவுள்ள
**கணபதி பதிப்பகத்தார்**
(மற்றும்) க.கி.ம.நே.இ.ந.மன்றம்
கண்டிகை, பூதூர்,
சென்னை - 67.

பாடியநல்லூர்.
19.01.2015

உ
ஓம் நவசிவாய

கயிலை மணி,
சிவநேயச்செல்வர்
நாகை ச.முத்துக்குமரசாமி தேசிகர்
கைபேசி : 9884383552.

# அணிந்துரை

சீர்காழி ஸ்ரீ சிற்றம்பல நாடி சுவாமிகளால் அருளப்பெற்றதும், சற்குரு மகரிஷி ஈஸ்வரபட்டா சுவாமிகளின் விளக்க உபதேசத்துடன் ஆன்மாக்கள் சிவபோகத்தை அனுபவ வாயிலாக உணர்வதற்குரிய முறையில் "துகளறு போதம்" அஞ்ஞானம் நீக்கும் ஞான நூலாக வெளியிடப் படுவது மெய்ஞானத்தை நாமெல்லாம் உணர வேண்டி வெளியிடப் படுகிறது என கொள்ளலாம்.

சீர்காழி ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் சுவாமிகளின் நான்குவித நெறிகளான ஞானம், யோகம், கிரியை, சரியை ஆகியவற்றை உபதேசிக்கும் "துகளறு போதம்" (அஞ்ஞானம் நீக்கும் ஞானம்) என்ற விளக்க உபதேசத்தை சற்குருவே உபதேசம் செய்வதைப் போன்றே தொகுத்து நாமெல்லாம் ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் சுவாமிகளின் மாணவராக உருவகம் செய்து கொண்டு ஆழ்ந்து சந்தேகம் நீங்க படித்து அதன் உட்பொருளை உணர்ந்து "பக்குவ நிலையை அடைவது" திண்ணம் என்று நூலாசிரியர் குறிப்பிடுகிறார். மேலும் இந்நூல்களைப் படிப்பவர்களுக்கு மெய்ஞானத்தை "புரிதல்" "அறிதல்" மற்றும் "உணர்தல்" ஆகிய மூன்று நிலைகளும் தோன்றுவது உறுதி என்று நூலாசிரியர் குறிப்பிடுகிறார்.

மேலும் இந்நூலுக்கு விளக்க உபதேசம் செய்தருளிய சற்குரு நாதர் மகரிஷி ஈஸ்வரபட்டா சுவாமிகளின் அவதாரம், மாபெரும் அருள் ஞானிகளின் அருளாசிகளைப் பெற்று சுவாமிகள் அருள் ஞானியாக அவனியெல்லாம் வலம் வந்து பழனியில் ஜீவசமாதி அடைந்து, தன்னை சரணடைந்த அடியவர்களுக்கு உருவ, அருவ, அருவுருவமாக தோன்றி குறை தீரும் வண்ணம் இன்றளவும் மானசீகமாக உபதேசம் செய்யும் சுவாமிகளின் சிறப்பியல்பு, "சிவமாகிய இறைவனே" சற்குருவாக அருஉருவாக வந்து உணர்த்துவான் என்பதை நாம் உணருகிறோம்.

துகள் என்றால் "குற்றம்" என்றும் குற்றம் என்பது அஞ்ஞானம் எனவும் "துகளறு போதம்" என்றால் "அஞ்ஞானத்தை நீக்கும் ஞானம்" என்று பொருள் கூறப்படுகிறது. சற்குருவின் உபதேசத்தாலும், திருவருளாலும் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களையும் நீக்கி "பரம்" என்ற பரசிவத்துடன் இரண்டறக் கலந்து பரமுக்தியை அடைவது

பற்றி விளக்கமாக நூலாசிரியர் விவரிக்கிறார். ஆன்மாக்கள் (உயிர்கள்) மும்மலங்களை நீக்கி, ஆன்ம சொரூபத்தை உணரும்போது, மெய்ஞானத்தை உணரும் நிலையில் பாச அறிவு, பசு அறிவு ஆகிய இரண்டும் மீண்டும் உயிர்கள் பொருந்தாதவாறு மெய்ஞானத்தை நிலை நிறுத்தி ஆன்மாவானது நீங்காமல் அனுபவிக்கும் சிவபோகத்தை அனுபவ வாயிலாக உணர இந்நூல் பயன் தரும் என்று நூலாசிரியர் கூறியுள்ளார்.

இந்நூலாசிரியர் திரு. இராம.சிவா அவர்கள் மருத்துவம் பயின்றும், மருத்துவத் துறையில் மனோதத்துவம், மனநோய் மற்றும் உளவியல், நுண்ணுயிரியல் துறைகளில் பல ஆய்வுகளை மேற்கொள்ளுவதுடன், ஆன்மிக ஆராய்ச்சியிலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு சிறப்பான ஆன்மிக நூல்களை வெளியீடு செய்யும் அவரின் ஆன்மிக நாட்டம் பெரிதும் பாராட்டப் படவேண்டிய ஒன்று. சற்குரு நாதரின் குருவருளாலும் திருவருளாலும் நூலாசிரியரின் சீரிய ஆன்மிகப் பணிகள் மேன்மேலும் சிறக்க ஸ்ரீ பரம்பொருளின் திருவருள் துணை நிற்க வேண்டி பிரார்த்திக்கிறேன்.

சைவ சமயத்தை ஈடேற்றும் வகையில் சைவப் பெருமக்கள் கற்றும், பொருள் உணர்ந்தும் பேரானந்தப் பெருவாழ்வு வாழ்ந்திட ஆன்மிக நூல்களை பெருமளவில் வெளியீடு செய்து ஆன்மிக வழிகாட்டியாய் விளங்கும் மனித நேயச் செம்மல் உயர்திரு. கு.தியாகராஜன் அய்யா அவர்களின் சீரிய பணிகள் இமாலய அளவில் பெருகிட எல்லாம் வல்ல ஸ்ரீசிவகாமி அம்பாள் சமேத தில்லை ஸ்ரீ நடராஜப் பெருமான் திருவருள் துணை நிற்க வேண்டி பிரார்த்திக்கின்றேன்.

சித்தத்தை சிவன்பாலே வைத்தார்க்கும்
அடியேன்
**ச.முத்துக்குமரசாமி**
15.01.2015

# அணிந்துரை

சைவ சந்தானாசாரியர்கள் காலத்திற்கு பிறகு தோன்றிய சீர் பரம்பரையில் வந்தவர் சீர்காழி ஸ்ரீ சிற்றம்பல நாடிகள். இவர் மெய்கண்ட சாத்திரங்களின் காலத்திற்கும் அவற்றை விளக்குவதற்காகத் தோற்றுவிக்கப் பெற்ற சைவ ஆதீனங்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் உதித்த ஞானிகளுள் ஒருவர்.

இவரருளிய "துகளறு போதம்" அனுபவ விளக்கம் தரும் நூல். சிவஞான போதம் போலவே இதுவும் ஒரு "போதம்." ஆன்மா இறைவனை நோக்கிச் செல்வது குறித்த விளக்கமாகிய இந்நூலில் அறியாமை, ஐயப்பாடு என்ற "துகள்" வராது. ஆகவே "துகளறு போதம்" எனப்பட்டது. இது பயில்வோர்க்கு வாழிலியல் ஞானமும், தத்துவ ஞானமும் ஊட்டுவதாக விளங்குகிறது.

சற்குருவால் மட்டுமே ஞானம் கிடைக்கும் என்பதை வலியுறுத்தி, பக்குவர், அபக்குவர் இலக்கணம் கூறி, சற்குரு நாதன் மெய்நெறியை உணர்த்தி அருளினார் என்று பாயிரத்திலேயே தெரிவிக்கிறார் நூலாசிரியர். பிறகு படிப்படியாக ஆன்மா விலக்க வேண்டியவைகளை - பூதங்கள், பொறிகள், அந்தக்கரணங்கள் முதலியன விலக்கும் முறையை விரிவாக விளக்கி இறைவனின் அருட் சக்தியை உணர்ந்து அதனுடன் ஒடுங்கினால் "பிரம்மம்" ஆவாய் என்று அறிவுறுத்துகிறார். பரமானந்த போதத்தை அனுபவிக்கும் விதத்தையும் (தேனைப் பருகிய வண்டு நிலை) தெளிய வைக்கிறார். சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்ற ஐவகை நிலைகளில் உள்ள 30 உணர்வு நிலைகளையும் அநுபவ வாயிலாக உணர்த்துதற்கு இந்த நூல் பயன்தரும் என்று "நூற்பயன்" கூறி முடிக்கிறார்.

இத்தகைய அருமையான நூலுக்கு மகரிஷி ஈஸ்வரபட்டா அவர்கள் - தமக்கு அளித்த விளக்க உபதேசத்தைத் திருவாளர் மருத்துவர் இராம.சிவா அவர்கள் யாவருக்கும் கிடைக்குமாறு வெளியிடுவது போற்றுதற்குரியது. எவருக்கும் தெரியாமலேயே பல சாத்திர விளக்கங்கள் மறைந்து விட்ட இன்றைய கால கட்டத்தில் இந்த நூலைத் தம் கணபதி பதிப்பகத்தின் மூலம் வெளியிடும் மனித நேயச்செம்மல் பாடியநல்லூர் திரு.கு.தியாகராசன் அவர்களின் ஆன்மிகத் தொண்டு மிகச்சிறந்தது.

R.VAIDHYANATHAN, B.Com., A.C.M.A.
Practicing Cost Accountant (M3394)
Plat No. 56, Door No.12
Indira Gandhi Street,
Kaveri Rangan Nagar,
Saligramam, Chennai - 93.

சீர்காழி. இரா.வைத்தியநாதன்
(சைவ சித்தாந்த பெருந்தகை
வை.இரத்தினசபாபதி
அவர்களின் முதன்மை மாணாக்கர்)

## முகவுரை

உயிர்கள் (ஆன்மாக்கள்) தோன்றிய காலத்தில் இருந்தே 1.ஆணவம் 2. கன்மம் 3. மாயை ஆகிய மூன்று மலங்களும் உயிர்களுடன் பொருந்தி, இறைவனின் திருவருளானது உணர்த்தினால் அன்றி, மெய் ஞானத்தை உயிர்களானது உணராததாகவும், 1. சகலம் 2. கேவலம் 3. சுத்தம் ஆகிய மூன்று அவத்தை நிலைகளை அடையக் கூடியதாகவும் இருக்கிறது.

உயிர்களானது மெய்ஞானத்தை உணராத வரையில் நான்கு வகையான தோற்றம், ஏழுவகையான பிறப்பு, எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதங்கள் எனப் பிறப்பும் மற்றும் இறப்பும் அடைந்து துன்பம் அடைகிறது.

இவ்வாறு பிறவித் துன்பத்தை அடையும் உயிர்களானது பிறவிதோறும் செய்யும் நல்வினைகளால் மனிதப்பிறவி எடுக்கிறது. அந்த மனிதப் பிறவியில் தீவினைகளைச் செய்து மீண்டும் பிறவிச் சுழற்சியில் மூழ்காமல் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நெறிமுறைகளில் பொருந்தி, நல்ல சற்குருவை உணர்ந்து, சற்குருவின் உபதேசத்தால் சத்திநிபாதம் (திருவருள் பிடிப்பு தோன்றுதல்) மற்றும் இருவினை ஒப்பு (கன்மவினைகள் நீங்குதல்) மற்றும் மலபரிபாகம் (மும்மலம் நீங்குதல்) பெறுதல் வேண்டும்.

துகள் என்றால் குற்றம் என்று கூறப்படும். குற்றம் என்பது அஞ்ஞானம். ஆகவே துகளறு போதம் என்பதற்கு "அஞ்ஞானத்தை நீக்கும் ஞானம்" என்றும் பொருள் கூறலாம்.

துகளறு போதத்தில் (1) சகலம் (2) கேவலம் (3) சுத்தம் என்ற மூன்று அவத்தை நிலைகள், (1) சாக்கிரம் (2) சொப்பனம் (3) சுழுத்தி (4) துரியம் (5) துரியாதீதம் என்ற ஐந்து அவத்தை நிலைகள், பத்து தசகாரியங்கள் ஆகிய மூன்றினையும் தொடர்பு படுத்தி, ஆணவமலம் அதன் வழி வந்த கன்மமலம், இதனால் ஏற்பட்ட மாயை (மாயையின் வியாபகமாகிய தத்துவங்கள்) ஆகிய

மூன்று மலங்களையும் நீக்கி, பரம் என்ற பரசிவத்துடன் (பரம்பொருளுடன்) இரண்டறக் கலந்து பெறக் கூடிய பரமுத்தியை (சாயுச்சிய முத்தியை) அடையும் வரையில், சற்குருவின் உபதேசத்தாலும் மற்றும் திருவருளாலும், பல்வேறு உணர்வு நிலைகளை பொருந்திக் கடந்து செல்வதையும் விளக்கிக் கூறுகிறது.

எனது சற்குரு மகரிஷி ஈஸ்வரபட்டா அவர்கள் அடியேனுக்கு ஶ்ரீ சீர்காழி சிற்றம்பல நாடிகள் இயற்றிய "துகளறு போதம்" என்ற இந்த நூலை விளக்க உபதேசம் செய்தருளினார். அவற்றை அடியேன் தொகுத்து கணபதி பதிப்பகம் மூலம் வெளியீடு செய்துள்ளேன். கணபதி பதிப்பகத்தாருக்கு அடியேனின் மனமார்ந்த நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன் மற்றும் இந்த புத்தகத்தை அழகுற வடிவமைத்துக் கொடுத்த பிரியங்கா கிராபிக்ஸ் நிறுவனத்தாருக்கு என்னுடைய பணிவான நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

**மருத்துவர். இராம.சிவா**

## சற்குரு நாதர் மகரிஷி ஈஸ்வரப் பட்டா

எனது சற்குருநாதர் மகரிஷி ஈஸ்வரபட்டா அவர்கள் கர்நாடக மாநிலம் மங்களூர் அருகில் உள்ள "ஈஸ்வர மங்களத்தில்" அவதரித்தவர். எமது சற்குருநாதரின் பெற்றோர் அங்குள்ள பஞ்சநாதீஸ்வரர் திருக்கோயிலில் இறை பணியாற்றி வந்த காலத்தில் பஞ்சநாதீஸ்வரரின் திருவருளால் அவர்களுக்கு சற்குரு மகரிஷி ஈஸ்வரப்பட்டா அவர்கள் குழந்தையாகத் தோன்றினார். பஞ்சநாதீஸ்வரரின் திருவருளால் சிறுவயதிலேயே மெய்ஞானத்தைப் பெற்று பல இடங்களில் ஞானியாக வலம் வந்து, பல்வேறு ஞானிகளின் அருளாசிகளைப் பெற்று, இறுதியில் பழனியில் வாழ்ந்து பல சித்துகள் புரிந்து அங்கு ஜீவசமாதி நிலையை 1970 ஆண்டு அடைந்தார்கள்.

எமது சற்குருநாதர் காரண காரியங்களுக்காகவே பிறவி எடுத்து, பல உயிர்களைக் கடை தேற்றும் பொருட்டு இன்றும் உருவ, அருவ, அருவுருவமாக அருள்பாளித்து வருகிறார்கள்.

எமது சற்குருவின் சிறப்பம்சம் என்னவென்றால், தன்னைச் சரணடைந்த அடியவர்களுக்கு உருவ, அருவ, அருவுருவமாகத் தோன்றி அடியவர்களின் குறை தீரும் வண்ணம் உபதேசம் செய்வதே ஆகும்.

எமது சற்குருவை தரிசிப்பதற்கும், அவருடன் பேசுவதற்கும் சென்மப்பிராப்தம் இருந்தாலே போதுமானது. இதற்கு இடைத்தரகர்கள் யாரும் தேவையில்லை. சற்குரு ஈஸ்வரப் பட்டாவுடன் பேசுவதாகக் கூறிக் கொண்டு பணம் பறிக்கும் போலிகளும் இருக்கத் தான் செய்கிறார்கள்.

எனது சற்குருவின் புகைப்படத்தைத் தியான அறையில் பொருத்தி, நல்ல எண்ணங்களுடன் தியானித்தாலே எமது சற்குருவை தரிசிக்கவும் மற்றும் அவருடன் பேசவும் முடியும் என்பதை மிகத் தாழ்மையுடன் கூறிக்கொள்கிறேன்.

எமது சற்குருவின் ஜீவசமாதியானது திண்டுக்கல் மாவட்டம் பழனியில் அமைந்துள்ளது. பழனியில் இருந்து திண்டுக்கல் செல்லும் சாலையில் பழனியாண்டவர் கலை மற்றும் அறிவியல் கல்லூரிக்குச் சற்றுத் தொலைவில் அமைந்துள்ளது. அனைவரும் அங்கு சென்று தரிசித்து வருமாறு பணிவன்புடன் வேண்டிக் கொள்கிறேன்.

எனது 17 ஆம் வயதில் சற்குரு மகரிஷி ஈஸ்வரப் பட்டாவைப் பற்றி எனது அண்ணன் டாக்டர். இராம.அரிராம் எம்.பி.பி.எஸ்., அவர்கள் மூலம் கேள்வியுற்று பின்னர் படிப்படியாக எனது சற்குருநாதர் இவரே என்று முழுமையாக உணர்ந்தேன்.

எனது இப்பிறவியின் பிராப்தம் என்பது எனது சற்குருவை தரிசித்ததும், அவரின் ஞான உபதேசத்தைக் கேட்டுச் சிந்தித்து, தெளிவடைவதற்குரிய வாய்ப்பை ஏற்படுத்தியதும் ஆகும்.

எமது சற்குருநாதர் அடியேனுக்கு உபதேசித்தத்தை தொகுத்து 1.சித்தாந்த சிவ சீவ ஐக்கிய ரகசியம் 2.ஒழிவில் ஒடுக்கம் எனும் சைவ சித்தாந்த ஞானம் 3. ஔவையின் குறள் சித்தாந்தம் 4.சிவவாக்கியர் மகா தத்துவம் 5.துகளறு போதம் 6.வாகீச முனிவரின் ஞானாமிர்தம் 7.சிவநெறிப்பிரகாசம் என பல நூல்களாக வெளியீடு செய்துள்ளேன். மேலும் பல நூல்கள் சற்குருவின் திருவருளால் வெளிவரும் என்று நம்புகிறேன்.

எமது சற்குருநாதர் உபதேசத்தால் மற்றும் இறைவனின் திருவருளால் அடியேன் அகண்ட பரிபூரண மெய் ஞானத்தை உணருகின்ற வாய்ப்பு அமைந்தால் அதுவே எனது பேரின்பமும், இப்பிறவியின் நோக்கமும் ஆக அமையும்.

எமது நூல்களைப் படிப்பவர்களுக்கு 1.மெய் ஞானத்தைப் பற்றி "புரிதல்" 2. வியாபகமான மெய்ஞானத்தை வியாப்பியமாக "அறிதல்" 3.மெய்ஞானத்தை இறைவனின் திருவருளால் "உணர்தல்" ஆகிய மூன்று நிலைகளும் தோன்ற ஆரம்பிக்கும் என்பது உறுதி.

எமது சற்குருநாதர் காரண காரியங்களுக்காக அவதரித்த நோக்கமே உயிர்களுக்கு மெய் ஞானத்தை (சத்தியத்தின் சத்திய நிலையை) உணர்த்துவது என்பதை அடியேன் உணர்ந்தேன்.

எமது குருநாதருக்கு திருக்கயிலாயப் பரம்பரை மெய்கண்டார் வழி வழி தோன்றிய ஞானிகளும், பதினென் மரபு சித்தர்களும், பெருங்களத்தூரில் ஜீவசமாதியுற்ற ஸ்ரீ சதானந்த சுவாமிகளும், பழனி சாது சுவாமிகளும், திருவாரூர் மடப்புரம் ஸ்ரீ குரு தட்சிணாமூர்த்தி சுவாமிகளும், பேரூர் ஆதின குரு முதல்வர் ஸ்ரீ சாந்தலிங்க தேசிகரும், திருப்போரூர் ஸ்ரீ சிதம்பர சுவாமிகளும், சிதம்பரம் மௌன மடாலய மௌன சுவாமிகளும், கர்நாடக மாநிலம் நந்திமலையில் விளங்கும் தபஸ்வி மகராஜ் சுவாமிகளும், அஷ்டாவக்ரர் போன்ற ஞானிகளும், தத்துவராயர் சுவாமிகளும், வள்ளலார் சுவாமிகளும் இது போன்ற பல ஞானிகளும் அருளாசி வழங்கியதாக, எனது சற்குருநாதர் அடியேனுக்கு உணர்த்தி உள்ளார். ஆகவே ஞானிகளின் மூலத்தை ஞானிகளே அறிவர்.

உயிர்களின் பிறவித்துன்பத்தை நீக்க சிவமாகிய இறைவனே சற்குருவாக உருவ, அருவ, அருஉருவாக வந்து உணர்த்துவான் என்பது நிச்சயிக்கப் பட்டது ஆகும்.

## தொகுப்பாசிரியர்

அடியேன் பெயர் இராம.சிவா என்ற டாக்டர். இராம.சிவசக்திவேலன், நெல்லையில் மருத்துவம் பயின்றுவிட்டு, மனோ தத்துவம் மனநோய் மற்றும் உளவியல், நுண்ணுயிரியல், ஆகிய துறைகளிலும் ஆய்வும் மேற்கொண்டு, ஆன்மிக ஆராய்ச்சியும், என்னால் இயன்ற மருத்துவ சேவையும் செய்து வருகிறேன். எனது தந்தையார் காலஞ்சென்ற கி.பெ.இராமதாஸ் பி.ஏ., அவர்கள் இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையில் உதவித் தணிக்கை அதிகாரியாகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். எனது மூத்த சகோதரர் டாக்டர். இராம.அரிராம் எம்.பி.பி.எஸ். அவர்கள் அரசு மருத்துவ அதிகாரியாகப் பணிபுரிந்து வருகிறார். எனது துணைவியார் திருமதி. சி.சுமதி எம்.ஏ., எம்.பில்., எம்.எட்., அவர்கள் காவல் துறையில் உதவி ஆய்வாளராகப் பணிபுரிந்து வருகிறார்.

எமது நூல்களில் சொற்குற்றம், பொருட்குற்றம் போன்ற பிழைகள் இருப்பின், அது என்னையே சாரும்.

பெரியோர்கள் அடியேனது பிழைகளைப் பொருத்தருளுமாறு பணிவன்புடன் வேண்டிக் கொள்கிறேன்.

எமது நூல்களைப் படித்து, அதன் உட்பொருளை உணர்ந்தவர்கள் தங்கள் கருத்துகளைப் பரிமாறுவதற்கு 9840776195 மற்றும் 9444152843 ஆகிய எனது கைப்பேசி எண்களைத் தொடர்பு கொள்ளவும்.

எமது இ-மெயில் முகவரி lionrssv@gmail.com

நன்றி.

இப்படிக்கு
அடியார்களின் அடியான்
**மருத்துவர். இராம.சிவா**
சென்னை.



ஸ்ரீமத் சிற்றம்பல நாடி சுவாமிகளின் ஜீவசமாதி வெளித்தோற்றம்

## சீர்காழி ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் வரலாறு

ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் "திருக்கயிலாயப் பரம்பரை" மெய்கண்டார் வழி வழி தோன்றிய ஞானி ஆவார். சீர்காழியில் தோன்றிய "காழிக்கங்கை மெய்கண்டார்" என்பவரின் மாணவர் (சீடர்) ஆவார்.

சீர்காழியில் பிறந்த ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் மிகப் பெரிய ஞானி ஆவார். இவருக்கு 63 சீடர்கள் இருந்தனர். 63 சீடர்களும் தமது சற்குருவின் திருவருளால் தமது சற்குருவோடு ஒரே சமயத்தில் ஜீவசமாதியில் ஆழ்ந்து முக்திப் பதம் பெற்றனர்.

ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் தமது 63 மாணவர்களுடன் ஒருநாள் உணவு சாப்பிடுவதற்காக அமர்ந்தார்கள். அன்றைய பொழுது உணவு சமைத்துப் பரிமாறிய சமையல்காரர், நெய் என்று எண்ணி வேப்பெண்ணெய்யைப் பரிமாறி விட்டார். 62 மாணவர்களும் வேப்பெண்ணெய் ஊற்றிய உணவை அமைதியாக உட்கொண்டனர். ஆனால் கண்ணப்பர் என்ற ஒரு மாணவர் மட்டும் அந்த உணவை வாயில் போட்டவுடன் ஓக்களித்து (குமட்டி) உணவு கசப்பதாகக் கூறினார். இதைக் கண்ட ஸ்ரீசிற்றம்பல நாடிகள் தமது திருக்கூட்டத்தில் பக்குவம் இல்லாத மாணவர் இருப்பது தகுதியோ? என்று கேட்டவுடன், கண்ணப்பர் தனது தவறுக்கு மனம் வருந்தி, மன்னிப்பு கேட்டுவிட்டு, தமது சற்குருவின் ஆணைப்படி வடக்கு நோக்கி யாத்திரை சென்று விட்டார்.

சில காலங்களுக்குப் பிறகு ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் தமது பக்குவநிலை பெற்ற 62 மாணாக்கர்களுடன் ஜீவசமாதி அடைய திருவுளங்கொண்டார். அப்பொழுது அந்தப் பகுதியை ஆண்ட அரசனை அழைத்து, சித்திரைத் திருவோண நாளில் தாமும், தமது திருக்கூட்டமும் ஜீவசமாதி அடைய தனித்தனியே 63 சமாதி நிலைகள் ஏற்படுத்துவதற்கு வேண்டுகோள் விடுத்தார்.

அந்த அரசனும் அவருடைய வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு, 63 சீவசமாதி ஒடுக்கங்களை அமைத்தான். இந்த அற்புத நிகழ்ச்சியைக் காண அரசனும், ஊர் மக்களும் திரளாக வந்துக் கூடினார்கள்.

குறித்த நேரத்தில் ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் தமது திருக்கூட்டத்தோடு வந்து, அங்குக் கூடியிருந்த அனைவரையும் வாழ்த்தி மூன்று வெண்பாக்கள் பாடித் தமக்கென்று அமைக்கப்பட்ட சமாதி ஒடுக்கத்தில் இறங்கி நிட்டை கூடி சீவ சமாதி அடைந்தார்.

அவரைத் தொடர்ந்து 62 மாணவர்களும் ஒருவர் பின் ஒருவராக, தமது சற்குருவை வணங்கி, ஒவ்வொரு வெண்பா பாடி தமக்கென்று அமைக்கப் பெற்ற சமாதி ஒடுக்கத்தில் இறங்கி, நிட்டையில் மூழ்கி சீவசமாதி அடைந்தனர்.

இதனைக் கண்ட அரசனும், மக்களும் வியப்புற்று அமைதி காத்த வேளையில் வடக்கே யாத்திரை சென்ற கண்ணப்பர் என்ற மாணவர் எதேச்சையாக அங்கு வந்து சேர்ந்தார்.

தமது சற்குருவும், 62 மாணவர்களும் சீவசமாதி நிலையடைந்ததைக் கேள்வியுற்று, தாயைப் பிரிந்த கன்றுக் குட்டி போல கதறியழுது, தமது சற்குருநாதரின் சீவசமாதியை வலம் வந்து வணங்கி, தம்மையும் ஏற்றுக் கொள்ளுமாறு ஒரு வெண்பாவைக் கீழ்கண்டவாறு பாடுகின்றார்.

"ஆண்ட குருசிற்றம்பலவா அடியேற்கா

மீண்டும் எழுந்தருள வேண்டாவோ – நீண்டவனும்

ஆரணனும் காணாத ஆனந்த வாரிதியில்

பூரணமாய் வையாத போது."

இந்தப் பாடலைக் கண்ணப்பர் பாடி முடித்தவுடன் ஸ்ரீசிற்றம்பல நாடிகளின் சமாதி திறந்தது. ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் கண் விழித்து, கண்ணப்பரைத் திருக்கண்ணோக்கம் செய்து, கண்ணப்பரை அழைத்து தம் மடிமீது குழந்தையைப் போல் அமரும்படிச் செய்து, தம்மோடு நிட்டையில் கூடும்படிச் செய்தார்.

இந்த அற்புதம் நிகழ்ந்த இடம் மயிலாடு துறைக்கு அருகில் கும்பகோணம் செல்லும் சாலையில் அமைந்துள்ள "சித்தர்காடு" (சித்துக்காடு) என்ற ஊரில் அமைந்துள்ளது.

ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் 1. துகளறு போதம் 2. திருப்புன் முறுவல் 3. இறந்த காலத்திரங்கள் 4. நிகழ்காலத்திரங்கள் 5.வருங்காலத்திரங்கல் ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.

ஸ்ரீ சிற்றம்பல நாடிகளின் 63 மாணாக்கர் திருக்கூட்டத்தைத் தவிர மேலும் பல மாணவர்கள் இருந்தனர். அவர்களுள் "கச்சி ஞானப்பிரகாசர்" என்பவர் காஞ்சிபுரத்தில் தொண்ட மண்டல ஆதினத்தை நிறுவியர் ஆவார். "ஸ்ரீ காழிப் பழுதைக்கட்டிச் சம்பந்த முனிவர்" என்பவரும் ஸ்ரீ சிற்றம்பல நாடிகளின் மாணவர்களுள் ஒருவர் ஆவார்.

"ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் தமது மாணவர்களுக்கு ஞானம், யோகம், கிரியை, சரியை என நான்கு வித நெறிகளாக உபதேசம் செய்து அருளியுள்ளார்." ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் தமது மாணவர்களுக்கு உபதேசித்ததை "துகளறு போதம்" (அஞ்ஞானம் நீக்கும் ஞானம்) என்ற நூலாக இயற்றியுள்ளார்.

அடியேன் எமது சற்குரு நாதரின் துகளறு போத விளக்க உபதேசத்தை "சற்குருவானவர் தனது மாணவர்களுக்கு உபதேசம் செய்வதைப் போல" தொகுத்துள்ளேன். எமது இந்நூலைப் படிக்கும் ஆன்மிக அன்பர்கள், தம்மையும் ஸ்ரீசிற்றம்பல நாடிகளின் மாணவராக உருவகம் செய்து, ஆழ்ந்து சந்தேகம் நீங்கும் வண்ணம் படித்து, அதன் உட்பொருளை உணர்ந்தாலே "பக்குவநிலை அடைவார்கள்" என்பது சத்தியம் ஆகும்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# துகளறு போதம்

## காப்பு

எல்லாம்பொய் என்றே எனைக்காட்டி எம்பிரான்
சொல்லாத பேரறிவு தான்சொல்லி – நல்லதுஒரு
அற்புதமாம் ஆனந்தம் ஆங்குஅருத்தல் செப்புதற்குக்
கற்பகத்தின் தாளிணைஎன் கண்.

சற்குரு :

ஆன்மசொருபத்தை உணரச் செய்து, பிரபஞ்சம் உட்பட அனைத்தும் மாயை (எல்லாம் பொய்) என்று எனக்கு உணரச் செய்த எம் இறைவன் (எனது சற்குருநாதன்) வார்த்தைகளால் விவரிக்க முடியாத ஞானத்தை (பேரறிவை) உபதேசித்தார் (எனக்கு அருளினார்) நன்மை தரும் அற்புதமாகிய பேரானந்தத்தை அடியேன் உணர்ந்ததைக் கூறுவதற்கு, கற்பக விநாயகரின் திருவடிகளை எனது அறிவில் பொருந்தி நின்றேன். [ஸ்ரீசிற்றம்பல நாடிகள் தாம் இயற்றிய இந்நூல் பரிபூரணம் பெற இப்பாடலில் இறைவனைப் பிரார்த்தனை செய்கின்றார்.]

## நூல்

## பாயிரம்

### சற்குருவால் மட்டுமே ஞானம் கிடைக்கும் எனல்

1. பதி பசு பாசந் தெரிந்து அந்தப் பாச
விதிவழியை வென்று அதனின் வேறாம் – கதிவழங்கும்
மெய்கண்டான் சந்தான மேவிச் சிவனாந்தங்
கைகண்டார் காணார் கரு.

சற்குரு :

பதி (இறை), பசு (உயிர்), பாசம் (தளை (அ) மும்மலங்கள்) ஆகிய மூன்று பொருட்களின் இலக்கணங்களை (இயல்புகளை) உணர்ந்து, உயிர்களின் ஞானத்தை மறைத்து அஞ்ஞான வழியில் செலுத்தும் பாசம் (மும்மலங்கள்) என்ற தளையை (பந்தத்தை) முற்றிலும் ஒழித்து, பாசம் என்ற பந்தத்திலிருந்து வேறுபட்ட நற்கதியாகிய

முத்தி (முக்தி) என்ற வீடு பேற்றை அருளும் ஸ்ரீமெய்கண்டாரின் சந்தான ஞானாசிரியரை அடைந்து, அந்த ஞானாசிரியரின் உபதேசத்தால் "சிவானந்தம்" சித்திக்கப் பெற்று (கைகூடி), சிவபோகத்தில் பொருந்தியவர்கள் மீண்டும் பிறப்பு மற்றும் இறப்பு தரும் பிறவிச்சுழற்சியை அடைய மாட்டார்கள் (அ) மீண்டும் ஒரு தாயின் கருப்பையில் கருவாகத் தோன்றி பிறக்க மாட்டார்கள்.

### பக்குவர் அபக்குவர் இலக்கணம் கூறுதல்

2. உற்ற சரியை ஒழியாத நற்கிரியை
குற்றம் இலா யோகக் குறிநெறியும் - முற்றிப்
பிறந்தார்கள் தாம் அறியப் பேசுகேன் அன்றிப்
பிறந்தார் அறியாத பேறு

சற்குரு :

முற்பிறவிகளில் சரியை, கிரியை, யோகம் ஆகிய சிவ புண்ணியங்களைச் செய்து முக்திப் பதத்திற்கு உரிய ஞானத்தைப் பெறாமல் தாம் செய்த நல்வினைகளால் இப்பிறவியில் பிறந்து பக்குவநிலையில் உள்ளவர்கள் உணரும் வண்ணம் உபதேசிக்கிறேன். (கூறுகின்றேன்) சரியை, கிரியை, யோகம் ஆகிய சிவபுண்ணியங்களைச் செய்யாமல் தாம் செய்த தீவினைகளால் இப்பிறவியிலும் முக்திப்பேறு அறியா வண்ணம் பிறந்த அபக்குவர்களுக்கு (பக்குவ நிலை இல்லாதவர்களுக்கு) உபதேசிக்க வில்லை. (இந்நூல் பக்குவப் பட்டவர்களுக்கு உரியது. அபக்குவர்களுக்கு உரியது அல்ல என்பது உட்பொருள் ஆகும்.)

### சற்குருநாதன் மெய்நெறி உணர்த்துவார் எனல்

3. எல்லாங் கழற்றி இறைவனுடன் கலக்க
வல்லார்கள் சொன்ன வழிபலவும் - சொல்லரிய
தம்பிரான் ஆகமதிற் சாற்றும் அவதரமும்
எம்பிரான் தந்தான் எமக்கு.

சற்குரு :

மும்மலங்கள் (ஆணவம், கன்மம், மாயை) அனைத்தையும் நீக்கி, பரம்பொருளாகிய இறைவனுடன் இரண்டறக் கலக்கும் (சாயுச்சிய முக்தி (அ) அத்துவித முக்தியைப் பெறும்) வல்லமை பெற்றவர்கள் (ஞானிகள்) உபதேசித்த பல நெறிமுறைகளையும், வார்த்தைகளால் விவரித்துக் கூற முடியாத இறைவன் (தம்பிரான்) அருளிய ஆகமங்களின் உட்பொருளையும்

(நெறிகளையும்) எனது சற்குருநாதன் எனக்கு உணர்த்தி அருளினார். (ஸ்ரீ சீர்காழி சிற்றம்பல நாடிகள் தமது சற்குரு தமக்கு ஞானத்தை உணர்த்தியதை, தமது சீடர்களுக்கு இப்பாடல் மூலம் உணர்த்துகின்றார்)

## 1. பூதப்பழிப்பு

(பஞ்ச பூதங்களையும் சடப்பொருள் என்று கூறுவதால் பூதப் பழிப்பு என்று கூறப்படுகிறது.)

### மண் (பிருதிவி) பூதம்

4. மண்ணுக்கு உயிராகி வந்து உரத்துத் தான் தரிக்கும்
எண்ணும் உரோமம் ஆதி இதன் காரியமாம் - கண்ணிற்
பிறவும் கடினமாய்ப் பேசியதுந் தானாம்
துறவுமுதற் பூதத் தொழில்

சற்குரு :

பஞ்சபூதங்களில் மண் (பிருதிவி) பூதமானது நிலத்திற்குரிய இயல்புகளை உடையதாய் மற்றும் கடினமாய் எவற்றையும் தாங்கும். மயிர், தோல், என்பு, தசை, நரம்பு என்று கருதப்படுபவை இதன் காரியங்களாகும். கண்களால் காணும் கடின தன்மை உடையதாகக் கூறப்படும் பிற பொருட்களும் இதன் காரியங்களே ஆகும். ஆகவே இது சடப்பொருளாய் அழியும் தன்மை உடையது.

எனவே மண் பூதத்தின் தொழில் சடத்தன்மை உடையது உயிர்த் தன்மை உடையது அல்ல என்று அதனைத் துறக்க வேண்டும்.

### நீர் (அப்பு) பூதம்

5. நீர்க்கு உயிராய் நின்றே நெகிழ்ந்து குளிருமே
பார்க்கில் நீர் ஆதி பகர்கருமம் - கார்க்குரிய
வெள்ள முதலாகும் மெய்யுணரின் அப்புத்தான்
அள்ள விடப்படாது ஆம்.

சற்குரு :

நீர் பூதத்தின் இயல்பு நெகிழ்ந்து குளிர்ச்சி செய்வது ஆகும். நீர் பூதத்தை ஆராய்ந்தால் நீர், உதிரம், சுக்கிலம், மூளை, மச்சை (மஜ்ஜை) ஆகியவை அதன் காரியங்களாகும். மேகங்களால்

தரப்படும் மழை நீருக்குச் சுவை சிறந்த குணம் என்பதையும், நீர் பூதத்தின் செயல்களையும் ஆராய்ந்து உண்மை உணர்ந்தால், நீர் பூதமானது உயிர்களின் அறிவை மயக்கி தீய நெறிகளில் செலுத்தி, பிறவிக்குக் காரணமாக கன்மவினைகளை ஏற்படுத்தி விடும். ஆகவே நீர் பூதத்தை தடுத்தல் (நீக்க) வேண்டும் என்பதை அறிய வேண்டும்.

### தீ (அக்கினி (அ) தேயு (அ) வன்னி) பூதம்

6. வன்னிக்கு உயிராகி வந்துசுட்டு ஒன்றுவிக்கும்
பன்னுபசி ஆதி பயில்கருமம் – மன்னும்
விளக்காகிப் பந்தமாய் வேறு ஆகி நிற்கும்
துளக்கம் இலாத் தேயுத் தொழில்

சற்குரு :

தீயின் இயல்பு "சுடுதல்" தொழிலைச் செய்யும். பசி, தூக்கம், பயம், மைதுனம், சோம்பல் போன்றவை இதன் காரியங்கள் ஆகும். அடர்த்தியான ஒளியாகவும், உயிர்களுக்கு பந்தத்தை ஏற்படுத்துவதாகவும் மற்றும் இது போன்று பலவிதமாகத் தொழிற்புரியும். உடலில் நிகழக்கூடிய தீ பூதத்தின் செயல்கள் காட்சிக்கு புலனாகாமல் இருப்பதால் (துளக்கம் இல்லாதது என்பதால்) தீ பூதத்தை நீக்க வேண்டும்.

### வாயு (காற்று) பூதம்

7. தேடப்பிரித்துத் திரட்டுவிக்கும் செய்கருமம்
ஓடல் முதல் ஓவா உயிர்மருந்து – நாடில்இவை
அல்லவாம் வாயு அருட்குருவால் காண்பது அன்றிச்
சொல்ல வாராதே துணிந்து.

சற்குரு :

வாயுவானது ஓரிடத்தில் உள்ள பொருட்களை பல திசைகளில் சிதறி ஓடச் செய்வதும், எப்பொருட்களையும் ஓரிடத்தில் ஒருங்கே திரட்டுவதும் போன்ற இயல்பினை உடையது. ஓடுதல், எழும்புதல், கிடத்தல், நடத்தல், நிமிர்தல் போன்ற காரியங்களை (செயல்களை) உடையது. இதன் உருவைக் (உருவத்தைக்) காணமுடியாது. வாயு பூதத்தை நன்கு ஆராய்ந்தால் மும்மல பந்தம்

உள்ள உயிர்களுக்கு, அந்த மும்மலம் (ஆணவம், கன்மம், மாயை) என்ற பந்தமாகிய நோயை நீக்கி, நன்னெறியில் சேர்ப்பது இந்த வாயுபூதம் அல்ல. எனவே வாயுபூதமானது ஒப்பற்ற உயிர் மருந்து அல்ல. இவ்வாறு இருக்கும் வாயுவை சற்குருவின் உபதேசத்தால் உணர முடியுமே தவிர, துணிவுடன் (உறுதியாக) வார்த்தைகளால் விவரித்துச் சொல்ல முடியாது.

(வாயுபூதமானது உயிர் மருந்து அல்ல என்பதால் வாயுபூதத்தை நீக்க வேண்டும்.)

### ஆகாய (வெளி) பூதம்

8. இரந்தரமாய் நின்றே இடங்கொடுக்கும் வானம்
பரந்த குரோதமுதற் பார்க்கில் - விரிந்த
கருமமாய் வேறாகும் காணலாம். உண்மைக்
குரவனால் என்றே குறி.

சற்குரு :

ஆகாய பூதமானது நிரந்தரமாக நின்று மற்ற நான்கு பூதங்களுக்கும் இடம் கொடுத்து "வெளி" ஆக இருக்கும். வாயுபூதத்தை ஆராய்ந்தால் காமம், குரோதம், உலோபம் (கஞ்சத்தனம்), மதம் (வெறி), மாற்சரியம் போன்ற குணங்களை உடையதாகவும், தூரத்தைக் குறிக்கும் எல்லைகளாகவும், வேறு விதமாகவும் இருக்கும். ஆகாய பூதத்தின் உண்மையை, மெய்யான சற்குருவால் (ஞானதேசிகரால்) மட்டுமே உணர முடியும் என்பதை அறிவாயாக.

இந்த ஐந்து (பஞ்ச) பூதங்களும் தத்துவங்களே (கருவிகளே) ஆகும். மாயையான இவை ஞானத்தால் அழியும் என்பதால் பஞ்ச பூதங்களை நீக்குக என்பது உட்பொருள் ஆகும்.

### பஞ்சபூத வடிவம் மற்றும் அதி தெய்வங்கள் கூறுதல்

9. வட்டம் அறுகோணம் மாயாத முக்கோணம்
இட்ட பிறைசதுரமே வடிவம் - எட்டரிய
வேதன்மால் மிக்கவிடையோன் மகேசன் உடன்
ஆதி அதிதெய்வ மாம்

சற்குரு :

"ஆகாயம்" வட்ட வடிவம், "வாயு" அறுகோண வடிவம், "தீ" முக்கோண வடிவம், "நீர்" பிறைவடிவம், "மண்" நாற்கோண (சதுர) வடிவம் உடையதாகும். பிருதிவிக்குப் பிரம்மாவும், அப்புவுக்குத் (நீருக்கு) திருமாலும், தேயுவுக்கு (அக்கினிக்கு) உருத்திரனும், வாயுவுக்கு மகேசுவரனும், ஆகாயத்திற்கு சதாசிவனும் அதிதெய்வங்கள் ஆகும்.

| பஞ்ச பூதங்கள் | வடிவம் | அதிதெய்வங்கள் |
|---|---|---|
| ஆகாயம் | வட்டம் | சதாசிவன் |
| வாயு | அறுகோணம் | மகேசுவரன் |
| தீ | முக்கோணம் | உருத்திரன் |
| நீர் | பிறைவடிவம் | திருமால் |
| மண் | சதுரம் | பிரம்மா |

**உடலை நான் என்று நினையாதிரு எனல்**

10. இப்படியே பூதத்தியல்பு அதனைத் தெளிந்தே
அப்படி நீ நில்லாமல் ஆங்கு அறிந்திட்டு – எப்படியுந்
தோன்றாமல் தேசிகன் தான் சொன்னபடி கண்டிருந்தால்
ஊன்றாய் அதுவாம் உடம்பு.

சற்குரு :

மேற்கூறிய ஐந்து பூதங்களின் இயல்புகளைச் சந்தேகம் நீங்கும் வண்ணம் உணர்ந்து, தெளிவடைந்து, உன்னிடத்தில் இருந்து வேறுபட்டிருக்கும் பஞ்சபூதங்களை, உன்னுடையது என்றுக் கருதிய அறியாமையை நீக்கி, "பஞ்சபூதங்கள் வேறு, நீ வேறு" என்று காண்பாயாக. இவ்வண்ணம் காணமுடியவில்லை என்றால் சற்குரு நாதர் அருளிய உபதேசப்படி பஞ்சபூதங்களை நன்கு ஆராய்ந்து அறிந்திருந்தால், உன்னுடைய உடலை "நான்" என்று நினைக்க மாட்டாய் (அ) பஞ்சபூதங்களை உன்னுடைய உடம்பு (தேகம்) என்று நினைக்க மாட்டாய்.

இப்பாடலை வேறுவிதமாகச் சிந்தித்தால் கீழ்கண்டவாறு விவரிக்கலாம். அது எவ்வாறு என்றால்,

பஞ்சபூதங்களின் உண்மை நிலைகளை அதன் இயல்புகளின்படி ஆராய்ந்து, சந்தேகம் நீங்கும் வண்ணம் உணர்ந்து, தெளிவடைந்து, இந்த ஸ்தூல உடலை ஆன்மா என்று கருதாமல் (எண்ணாமல்) இந்த ஸ்தூல உடலின் உண்மை நிலையையும் ஆன்மாவின் உண்மை நிலையையும் அறிந்து சற்குருநாதரின் உபதேசப்படி எந்த விதத்திலும் இந்த ஸ்தூல உடலை ஆன்மாவென்று நினைக்காமல், சடப்பொருள் என்பதை உணர்ந்து இருப்பாய் என்றால், ஸ்தூல தேகமானது புலாலால் (மாமிசத்தால்) ஆனது என்ற உண்மையை உணருவாய். (ஆகவே உன்னுடைய உடல் மாமிசத்தால் ஆன சடப்பொருள் என்று இந்த உடலை துறப்பாயாக)

இப்பாடலை மேலும் விளக்கிக் கூறலாம் அது எவ்வாறு என்றால்

பஞ்ச பூதங்களின் இயல்புகளை உணரும் பொழுது, பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் (பஞ்ச பூத பஞ்சீகரணத்தால்) ஸ்தூல உடல் தோன்றுகிறது. இந்த ஸ்தூல உடலை 'நான்' என்று எண்ணி, "நான் வேறு, ஆன்மா வேறு" என்று நினைக்கிறாய். சற்குருவின் திருவடிகளைச் சரணடைந்து, சற்குருவின் பஞ்சபூதங்கள் பற்றிய உபதேசத்தை நன்கு சிந்தித்தால், பஞ்ச பூதங்கள் சடப்பொருள் என்றும், பஞ்ச பூதங்கள் மாயை என்றும், மாயையான பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் ஆன ஸ்தூல உடம்பு மாமிசம், எலும்பு முதலியவற்றால் ஆனது போலத் தோன்றினாலும், இந்த ஸ்தூல தேகமும் மாயையே என்பதை உணருவாய். அப்பொழுது இந்த ஸ்தூல உடம்பை "நான்" என்று நினைக்க மாட்டாய். அப்பொழுது "நான் யார்?" என்று ஆராயத் தொடங்குவாய் (விசாரம் செய்வாய்). அந்த விசாரத்தின் (ஆராய்ச்சியின்) முடிவில் நான் என்பது அனாதியான (தொன்று தொட்ட (அ) பழமையான) ஆன்மா என்று உணருவாய்.

## 2. பொறியறவுணர்தல்

ஐம்பொறிகளை சடப்பொருள் என்றும், மாயை என்றும் உணர்த்தி ஐம்பொறிகள் என்ற தத்துவக் கருவிகளை விட்டு நீங்கும் வண்ணம் செய்தல்.

### ஐம்பொறிபுலன்கள் தாமே நீங்கும் வகை கூறுதல்

14. பூதம் இடமாய்ப் பொருந்தும் பொறிபுலன்கள்
நாதன் அருளாலேநீ நாடியவை – ஏதம்எனத்
தத்தம் உருஉணரத் தான் அகலும் அப்போதே
சத்தமுத லாதிவிடும் தான்.

சற்குரு :

பஞ்ச (ஐம்) பூதங்களை ஆதாரமாகக் கொண்டு உடலில் பொருந்தும் மெய், வாய், கண், செவி, மூக்கு என்ற ஐம்பொறிகளையும், இந்த ஐம்பொறிகளின் மூலமாக சப்தம் (ஒலி), ரசம் (சுவை), ரூபம் (உருவம்) கந்தம் (நாற்றம்) ஸ்பரிசம் (தொடு உணர்வு) என்ற ஐந்தையும் உணரும் ஐந்து புலன்களையும், சீடனே (மாணவனே) நீ! இறைவனின் திருவருளைத் துணையாகக் கொண்டு (அ) சற்குருவின் உபதேசத்தைத் துணையாகக் கொண்டு ஆராய்ந்து, அந்த ஐம்பொறி புலன்கள் ஒவ்வொன்றின் உருவ மற்றும் இயல்புகளின் உண்மைகளை உணரும் பொழுது, அவை சடப்பொருட்களாய் அழியும் தன்மை உடைய பொருட்களாகக் கண்டால் (அ) அவை துன்பம் தருபவை என உணர்ந்தால், அவை தாமாகவே உன்னை விட்டு நீங்கும். அப்போது சப்தம் முதலிய மாத்திரைகளும் உன்னை விட்டு நீங்கும்.

பஞ்சபூதங்கள், ஐம்பொறிகள், ஐம்புலன்கள் மற்றும் பஞ்ச தன் மாத்திரைகள் இவற்றின் உண்மை நிலையை, சற்குருவின் திருவருளால் ஆராயும் பொழுது, அவை சடப்பொருள்கள் என்றும், மாயை என்றும், ஞானத்தால் அழியக் கூடியவை என்றும் உணரும் பொழுது அவை தானாகவே நம்மை விட்டு நீங்கும்.

## பிறப்பு எடுத்தலை நீக்கும் விதம் கூறுதல்

12. சத்தம் ஆதி ஐந்தினையும் சந்தித்து நீ அகல
அத்தால் வரும்பயன்கள் ஆங்குஅகலும் – எத்தாலும்
காணாமல் அவ்விடயங் கைகழலக் கைகழலும்
நாணாப் பிறப்பின் நவை.

சற்குரு :

சத்த, பரிச, ரூப, ரச, கந்தம் ஆகிய ஐந்தையும், பஞ்ச பூதங்களின் குணம் என்று, நீ (மாணவனே)! ஒவ்வொன்றையும் தனித் தனியாக உணர்ந்து அவற்றிலிருந்து நீங்கும் பொழுது, அவற்றால் நீ அடையும் உலகவிடய இன்பங்கள் மற்றும் துன்பங்கள் அப்பொழுது உன்னை விட்டு நீங்கும்.

எக்காரணத்தாலும் "ஆசை" என்பது என்றும் வெட்கத்தை தராததும் மற்றும் தொடர்ச்சியாக பிறவி எடுப்பதற்கு ஆதாரமானதும் ஆகும். ஆசை எனப்படும் குற்றத்தை உடைய கன்ம வினைகள் மற்றும் ஐம்பொறிகளால் ஏற்பட்ட உலகவிடயங்கள், இனி எக்காரணத்தைக் கொண்டும் உன்னை மீண்டும் பொருந்தாமல் கழன்று, உன்னை விட்டு அறவே நீங்கும்.

பஞ்ச தன்மாத்திரைகளை உணர்ந்து அவற்றை விட்டு நீங்கும் பொழுது அதனால் ஏற்பட்ட கன்மவினைகள் நீங்கி, இனி பலவகையான பிறப்பு எடுப்பதும் நீங்கும்.

## விசாரத்தின் நன்மை

13. வாக்காதி யத்துடனே நீங்கவச னாதிவிடு
நீங்காத உட்கரண நீங்குகே – தாக்கி
மனது முதலாக வந்தவந்த போது
தனது செயல் உணரத்தான்.

ஐம்புலன்களும் தமது செயல்களில் இருந்து நீங்கும் பொழுது அவற்றை ஆதாரமாகக் கொண்டு செயல்படும் வாக்கு, பாதம் (கால்) பாணி (கை), பாயுரு (ஆசனவாய்) உபத்தம் (கருவாய்) என்ற கன்மேந்திரியங்கள் ஐந்தும் மற்றும் கன்மேந்திரியங்களின் செயல்களாகிய வசனம் (சொல்லல்), கமனம் (நடத்தல்), தானம்

(கொடுத்தல்), விசர்சனம் (விடுத்தல்) ஆனந்தம் (மகிழ்தல்) ஆகியவையும் நீங்கி விடும். இதனால் இதுவரை உன்னால் நீக்கப்பட முடியாத அந்தக் கரணங்களும் (மனம், புத்தி, சித்தம், அகங்காரம்) நீங்கும். இது வரை பழகிய இவற்றின் வாசனைகள் (பழகிய இவற்றின் செயல்கள்) மூலம் மனம் முதலிய அந்த கரணங்கள் மீண்டும் முளைத்து எழும் பொழுதெல்லாம் செயல்படும் முறையை மீண்டும் உணரும் பொழுது, அவை முற்றிலும் உன்னை விட்டு நீங்கி விடும்.

ஐம்புலன்கள் நீங்க, கன்மேந்திரியங்கள் மற்றும் கன்மேந்திரிய செயல்கள் நீங்கும். இவை நீங்கும் பொழுது அந்த கரணங்கள் நான்கும் நீங்கும். இவை முற்றிலும் நீங்கும் வரை, இந்த தத்துவங்கள் அநாதியே செயல்பட்டு வந்த காரணத்தால், மீண்டும் மீண்டும் தன்னியல்பாக அந்த கரணங்கள் முளைத்து எழுந்தாலும், அவற்றை "விசாரத்தால்" மீண்டும் மீண்டும் அவற்றின் பொய்மையை உணரும் பொழுது, குறுகிய காலத்தில் அவை முற்றிலும் நம்மை விட்டு நீங்கிவிடும்.

## 3. அந்தக்கரணசுத்தி

(அந்த கரணங்களை (மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய நான்கையும்) நீக்கும் வழி முறை கூறுதல்)

### அகர, உகார, மகார, விந்து செயல் கூறுதல்

14. மன்னும் மகாரம் மனம் செலுத்தும் புத்தியினை
உன்னும் உகாரம் உபகரிக்கும் - முன்னாகும்
ஆங்காரம் தன்னை அகாரம் செலுத்தியிடும்
நீங்காத சித்தம் விந்து நேர்.

சற்குரு :

நிலைபெற்ற "ம" காரம் மனதைச் செயல்படுத்தும். தெளிவை ஏற்படுத்தும் புத்தியினை "உ" காரம் செயல்படுத்தும். மனம் மற்றும் புத்தியை நன்கு அறிவேன் என்று ஆர்ப்பரித்து முளைத்து எழும் ஆங்காரத்தை "அ" காரம் செயல்படுத்தும். இடைவிடாமல் சிந்திக்கும் சித்தத்தை "விந்து" செயல்படுத்தும். இதனை அறிவாயாக!

| | |
|---|---|
| "மகாரம்" | மனது |
| "உகாரம் | புத்தி |
| "அகாரம் | அகங்காரம் |
| "வித்து | சித்தம் |

### அந்தகரணம் நீங்குதல் வேண்டும் எனல்

15. அந்தக்கரணம் அகல அதில் கூடும்
தொந்தக் கலாதித் துரிசு அறுமே – பந்திக்கும்
சித்த மலம் அறுத்துத் தீர உனக்கு ஏற
ஒத்த படியே உணர்.

சற்குரு :

அந்த கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய நான்கும், தம்முடைய செயல்கள் அற்று சடமாக நீங்குவதால் அந்த கரணங்களுடன் பொருந்திச் செயல்படும் கலை, வித்தை, அராகம் (கலாதிகள்) போன்றவற்றின் குற்றங்கள் நீங்கும். இதனால் பந்தங்களை ஏற்படுத்தும் சித்தத்தில் பொருந்திய மயக்கம் நீங்கும். மாணவனே! நீ நன்னெறியை அடைவதற்காக, அந்தக் கரணங்களை சடப்பொருள் என்று உணர்வாயாக. இவ்வண்ணம் உணர்ந்து அந்த கரணங்களைத் துறப்பாயாக (நீக்க வேண்டும்.)

## 4. கலாதி ஞான நிராகரணம்

(கலை, வித்தை, அராகம் போன்றவற்றால் ஏற்படும் ஞானமும் உண்மையல்ல என்று உணர்த்துதல்)

16. பொங்கு புலன்அருந்தப் போதம் தருமாயை
தங்குகலை ஆதி தருஞானம் – இங்கு இதனை
நீங்குபடி மாணவக நின்போதம் ஒன்றிரண்டு
தூங்குபடி நில்லாய் துணிந்து

சற்குரு :

ஐம்புலன்களின் செயல்களால் இப்பிறப்பின் இன்ப துன்பங்களை அனுபவிக்குமாறு, உனக்கு விபரீத அறிவைத் (போதத்தை) தருகின்ற, அசுத்த மாயையில் இருந்து தோன்றி, கலை, வித்தை, அராகம் போன்ற கலையாதிகளால் தரப்படும் ஞானம் இப்பொழுது நீங்குமாறு, மாணவனே! "நான், எனது" என்று

நினைக்கக் கூடிய உன்னுடைய ஞானம் (அல்லது) அறிவு, இச்சை, தொழில் என்ற மூன்றும் முனைப்பற்று துவண்டுபோகும்படி சற்குருவின் திருவருளால் தெளிவுடன் இருப்பாயாக.

**கலையாதிகளை நீக்குவதற்குரிய காரணம் கூறுதல்**

17. கால நியதி கலை ஆதி தத்துவங்கள்
சால அறிவு இச்சை தொழில தான்பூத்தல் – மூலமாம்
மாயை மயக்கல் வரைத்தல் வினைகூட்ட
ஆய விடலாம் என்று அறி.

சற்குரு :

கலை, வித்தை அராகம் என்னும் மூன்று தத்துவங்களும் முறையே தொழில், இச்சை, அறிவு ஆகிய மூன்றையும் உயிர்களுக்குத் தருபவை ஆகும். இந்த மூன்று தத்துவங்களின் மூலமான (தோற்றத்திற்கு காரணமான) மாயையானது உயிர்களுக்கு மயக்கத்தை (அஞ்ஞானத்தைத்) தரும். மேலும் உயிர்களின் ஸ்தூல தேகத்தின் மூலம், உயிர்களை வரம்பு (வரைமுறைப்) படுத்துவதும், உயிர்களை அவற்றின் கன்ம வினைக்கு ஏற்ப இருவினைப் பயன்களை அனுபவிக்கச் செய்வதும் ஆகும். ஆகவே இத்தகைய இயல்புகளை உடைய இவை, இறைவனின் கட்டளைப்படி செயல்பட்டு, உடலோடு அழியும் என்று உணர்ந்து அவற்றை நீக்க வேண்டும். ஆகவே கலாதி ஞானம் விபரீதமான ஞானம் என்று அவற்றைத் துறக்க (நீக்க) வேண்டும் என்பதை மாணவனே! அறிவாயாக

## 5. சுத்த தத்துவ தூடணம்

(சுத்த தத்துவங்களைப் பழித்துக் கூறுதல்)

**சுத்த தத்துவங்களை நீக்குவதற்குரிய காரணம் கூறுதல்**

18. ஆன அதனால் அழுந்தினால் ஆசுஅதற்குஏகன்
ஈன வயிந்தவத்தின் எல்லைகாண் – ஊனமிலாப்
போகந் தரும் ஆனால் பொல்லாதோ புண்ணியத்தின்
ஆகம் துணை ஆனார்க்கு ஆம்.

சற்குரு :

முற்பிறவிகளில் செய்த புண்ணியங்களின் பயனால் இப்பிறவியில் மனிதப் பிறவி எடுத்து அதற்கேற்ற உடலைப் பெற்றவர்களுக்கு, தம்முடைய உடலைக் கருவியாகக் கொண்டு

தவம் புரியும் பொழுது, பேரின்பத்தைத் தரும் சுத்த தத்துவங்களை பழித்துக் கூறுவதற்கான காரணம் என்னவென்றால் சுத்த தத்துவங்கள் குற்றமற்ற பேரின்பத்தை மட்டுமே தரும் எல்லைக்கு உட்பட்டது. எனவே சுத்த தத்துவமானது பேரின்பத்தைத் தருவது பொல்லாப்பு (தீமை) உடையதோ? ஆராய்வாயாக.

இப்பாடலை இவ்விதமாகவும் விளக்கிக் கூறலாம். அது எவ்வாறு என்றால்,

சுத்த தத்துவங்களால் பேரின்பத்தில் மூழ்கும் பொழுது, சுத்த தத்துவங்களையும் நீக்க வேண்டும் என்று கூறுவது ஏன்? (அல்லது) சுத்த தத்துவங்கள் குற்றம் உடையது என்று கூறுவது ஏன்?

சுத்த தத்துவங்கள் பேரின்பத்தை மட்டும் தரும் எல்லைக்கு உட்பட்டது. குற்றமற்ற பேரின்பத்தைச் சுத்த தத்துவங்கள் தரும் பொழுது முற்பிறவிகளில் செய்த புண்ணியத்தால் இப்பிறவியில் மனிதப்பிறவி எடுத்து, தன்னுடைய உடலைக் கருவியாகக் கொண்டு பேரின்பத்தை அடைந்தவர்களுக்கு உதவும் சுத்த தத்துவங்கள் பொல்லாப்பு (தீமை) உடையதோ?

இவ்விரண்டு விளக்கங்களையும் ஆராய்ந்து உணரும் பொழுது, சுத்த தத்துவங்கள் பேரின்பத்தை மட்டுமே தரும். ஆனால் இறைவனோடு இரண்டறக் கலக்கும் பரமுக்தியை (சாயுச்சிய முக்தியை (அ) அத்துவித முக்தியைத்) தராது என்பதால், பேரின்பத்தை அடைந்த பின்பு, அந்த பேரின்பத்திலேயே மூழ்கிவிடாமல் அதை அடைவதற்கு துணையாய் இருந்த சுத்த தத்துவங்களையும் நீக்கி விட்டு, பரமுக்தியைப் பெற வேண்டும் என்பதால் சுத்த தத்துவங்களைப் பொல்லாப்பு உடையது என்று ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் கூறுகிறார்.

பேரின்பத்திற்கு இன்றியமையாததாக (முக்கிய காரணமாக) சுத்த தத்துவங்கள் இருப்பினும், பேரின்பம் என்ற பந்தத்திற்கு காரணமாக இருப்பதால் மற்றும் பரமுக்திக்கு தடையாக இருப்பதால், சுத்த தத்துவங்களையும், நீக்க வேண்டும் என்பது உட்பொருள் ஆகும். ஆகவே சுத்த தத்துவங்கள் பதமுக்தியைத் தரும் பரமுத்தியை தராது. ஆகவே சுத்த தத்துவங்களையும் நீக்கி, பரமுக்திக்குரிய நெறியைத் தேடுக.

**சுத்த தத்துவங்களையும் நீக்குவதால் ஏற்படும் பயன் கூறுதல்**

19. சுத்தவித்தை ஆதிமுதற் சொன்னஏழ் தத்துவமும்
ஒத்து நடத்தியிடும் ஓவாமல் - வித்தை செயல்
ஏறிக் குறைந்துஒத்தல் எப்போதும் பார்த்திடவே
மாறிப் பிறந்து அகலு மாறு.

சற்குரு :

சுத்த தத்துவங்கள் ஐந்தும் (சுத்தவித்தை, ஈசுவரம், சாதாக்கியம், சக்தி, சிவம் ஆகிய ஐந்தும் சுத்த தத்துவங்கள் ஆகும்.) முற்கூறிய சுத்த வித்தியா தத்துவங்கள் ஏழினையும் (7) (காலம், நியதி, வித்தை, கலை, இராகம், புருடன், மாயை ஆகிய ஏழும் சுத்த வித்தியா தத்துவங்கள் ஆகும்) ஓய்வில்லாமல் ஒரு சேர செயல்படுத்தும். சுத்த வித்தியா தத்துவங்கள் ஒவ்வொன்றும் "மிகுதிப்படுவதையும், குறைவதையும்" மற்றும் "அவற்றின் தோற்றமும் ஒடுக்கமும்" ஆகிய இரண்டையும் நன்கு உணர்ந்து, சற்குருவின் திருவருளால் உரிய நெறிமுறைகளை உணர்பவர்கள் "பிறப்பு மற்றும் இறப்பு" என்னும் பிறவிச்சுழற்சியை (பிறவிப் பெருங்கடலை) விட்டு நீங்குவார்கள். (ஆகவே சுத்தவித்தியா தத்துவங்கள் மற்றும் அவற்றை இயக்கும் சுத்த தத்துவங்கள் ஆகிய இரண்டையும் உணர்ந்து நீக்க வேண்டும்.)

## 6. தத்துவாதீதம்

(தத்துவங்களில் இருந்து நீங்கிய நிலை)

**ஆறு அத்துவாக்களே தத்துவாதீதம் எனல்**

20. மண்முதலாம் நாதம் அந்தமாய் வந்த தத்துவத்தின்
உண்மை அறிந்து எல்லாம் ஒழிந்தாயே - எண்ணில் இவை
தத்துவாதீதம் எனச் சாற்றுங்காண் சைவமறை
அத்துவா எல்லாம் அற.

சற்குரு :

மாணவனே! மண் (பிருதிவி) பூதம் முதல் நாத தத்துவம் வரை உள்ள தத்துவங்களின் உண்மை நிலையை அறிந்து, அவற்றைச் சடப்பொருட்கள் என்றும், அழிந்து போகக் கூடியவை என்றும் உணர்ந்து, அவற்றின் பந்தங்களில் (தொடர்பில்) இருந்து

நீங்கினாய். மேலும் நன்கு ஆராய்ந்து பார்க்கும் பொழுது, மண் முதல் நாத தத்துவம் வரை உள்ள தத்துவங்கள் நீங்கும் பொழுது புலப்படுவது தத்துவாதீதம் என்ற ஆறு அத்துவாக்கள் (1.மந்திரம் 2.பதம் 3.வண்ணம் 4.புவனம் 5.தத்துவம் 6.கலை ஆகியவை ஆறு அத்துவா ஆகும்.) என்று சைவ ஆகமங்கள் உபதேசிக்கும். அந்த ஆறு அத்துவாக்களையும் நீக்குவாயாக.

## ஐந்து சுத்திகளால் தத்துவாதீதம் உணரலாம் எனல்

21. இப்பரிசே ஐந்துசுத்தி எய்தியதால் எப்போதும்
செப்பு அரிய மாயாதி தீருமே - அப்பரிசே
ஆங்கு அவற்றினோடே அழியும் வினைமலந்தான்
நீங்கவற்றோ நீங்கா நிலை.

சற்குரு : தத்துவாதீதம் என்ற நிலையை உணர்வதற்கு ஐந்து வகையான சுத்திகள் (ஐந்து சுத்திகள் என்பது 1.பூதப்பழிப்பு 2.பொறியற உணர்தல் 3.அந்தகரணசுத்தி 4.கலாதிஞான நிராகரணம் 5.சுத்ததத்துவ தூடணம்) அடைந்தவர்களுக்கு, 'இத்தகைய தன்மை உடையது' என்று சொல்வதற்கு கடினமான மாயையும் அதன் காரியங்களும் நீங்கும். மாயையும் அதன் காரியங்களும் நீங்கும்பொழுது கன்ம வினைகளும் இவற்றோடு நீங்கி விடும். இந்நிலையில் மும்மலங்களில் எஞ்சியுள்ள (மீதமுள்ள) ஆணவ மலம் மட்டும் நீங்குவதற்குக் கடினமான நிலையை உடையதாகும். (ஆகவே ஆணவமலத்தோடு நீங்க முடியாத நிலையையும் நீக்குக.)

## 7. சகலதரிசனம்

(தத்துவங்களில் இருந்து நீங்கி, அவற்றை தன்னிலும் வேறுபட்டதாக உணருதல்)

### முத்திச்சகலம், பெத்தசகலம் பற்றிக் கூறுதல்

22. நின்றுநின்று வந்த நிலைதோறும் நீ அறிந்தது
அன்றி அவைதன்னை அகன்றாயே - இன்று இவைதான்
முத்திபடும் சகலம் முன்னம் படுஞ்சகலம்
பெத்தம் அது என்று நீ பேசு

சற்குரு :

மாணவனே! நீ ஒவ்வொரு தத்துவங்களையும் பொருந்தி, அந்தத் தத்துவங்களை ஒவ்வொன்றாக அனுபவித்து நீங்கி வந்த

நிலையில், அந்தத் தத்துவங்களை சடப்பொருள் என்று நீ உணர்ந்த போது, அத்தத்துவங்களில் இருந்து முற்றிலும் (முழுவதும்) நீங்கி சுத்தி (தூய்மை) பெற்றாய். இந்த நிலையில் "இந்தத் தத்துவங்களை உன்னிலும் வேறுபட்ட ஒன்றாக (வேறுபட்டதாகக்) காணுதல்" என்பது "முத்தியில் சகலம் (முக்திச்சகலம்) ஆகும்" இந்நிலைக்கு முன்பு (ஐந்து விதமான தத்துவ சுத்திகளுக்கு முன்பு) தத்துவங்களோடு பொருந்தி நின்ற நிலையானது மும்மலங்களோடு கூடிய சகலம் ஆகும். இந்த சகலமானது பெத்த நிலை (அ) பெத்தசகலம் (தத்துவங்களால் கட்டுண்ட நிலை) என்று நீ கூறுவாயாக. (முக்திச் சகலம், பெத்த சகலம் என்ற இரண்டிற்கும் உள்ள வேற்றுமைகளை அறிந்து கொள்வாயாக.)

## 23. முக்திச்சகலத்தின் இலக்கணம் கூறுதல்

23. அஞ்சு வகையான ஆறாறும் நீத்ததற்பின்
எஞ்சிவரும் ஆணவத்தின் மேலீடு - வஞ்சம்அறச்
சாற்றில் அது கேவலமாம் தான் கழித்துப் போந்தநிலை
சாற்றில் அதுசகலந் தான்.

சற்குரு :

ஐந்து வகையான சுத்தி முறைகளால், முப்பத்தாறு (36) தத்துவங்களையும் நீக்கி விட்டாலும், ஆணவமலம் மட்டும் இருப்பது "ஆணவ மலத்தின் மேலீடு" ஆகும். ஆணவமலத்தின் மேலீடு (ஆணவ மலத்தை மட்டும் ஆதாரமாகக் கொள்வது) என்பதை, மெய்யாகக் கூறினால் அஃது "கேவலம்" என்ற நிலையாகும். இந்த கேவல நிலையினையும் நீங்கி (ஆணவ மலத்தையும் நீக்கி) அடையும் நிலை என்பது "முக்திச்சகலம்" ஆகும்.

ஆகவே சகலம் என்பது மூன்று வகை அவை

1. முக்திச் சகலம் — மும்மலம் நீங்கிய நிலை
2. பெத்தசகலம் — மும்மலம் நீங்காத நிலை
3. கேவலசகலம் — கன்மம், மாயை ஆகிய இருமலம் நீங்கி ஆணவமலத்தோடு மட்டும் கூடியிருக்கும் நிலை.

## 8. கேவலம்

(ஆணவமலமானது ஆன்ம சொரூபத்தை (அ) ஆன்ம அறிவை மறைத்து நிற்கும் நிலை)

### ஆணவமலம் தனித்து நின்று ஆன்மாவை மறைத்தல்

24. அன்றிவந்த தத்துவங்கள் எல்லாம் அகன்றிடவே
ஒன்றிநின்ற ஆணவம்தான் ஒன்றுமே – என்றுந்தான்
நீங்கா இருள்விழி போல் நிற்குமே ஆன்மாவும்
பாங்காக ஆங்கே பதிந்து.

சற்குரு :

உயிர்களுக்கு (சீவன்களுக்கு) அஞ்ஞானத்தை (அறியாமையை) ஏற்படுத்தி, மெய் ஞானத்தை உணரவிடாமல் மயக்கி வந்த தத்துவங்கள் எல்லாம் நீங்கிச் சுத்தி (தூய்மை) யான நிலையிலும், ஆன்மாவை விட்டுப் பிரியாது, ஆன்மாவை மறைத்து நின்ற ஆணவமலம் மட்டும், கண்களின் ஒளியை மறைத்து நிற்கும் நீங்காத (அகலாத) இருள் போல ஆன்மாவைப் பொருந்தியிருக்கும். அதனால் ஆன்மாவும் அந்த ஆணவ மலத்தினால் மறைந்து செயல் அற்று நிற்கிறது.

### அருட்கேவல நிலை கூறுதல்

25. பகல் இழந்த வான்போல் பரவுமலம் நீயாய்
இகல் அறவே நின்றாய் இழந்தாய் – அகல் அறிவு
வாடாத முத்தியினில் வாய்த்த அருட் கேவலம் நீ
நாடாத கேவலமுன் நாள்.

சற்குரு :

சூரியன் இல்லாத வானம், இருள் ஆவதைப் போல, உனது அறிவை வியாபித்து மறைத்த ஆணவமலமே "நீ" ஆனாய். அதனால் உனது வலிமை (ஆன்மபலம்) ஒழிந்து நீ செயல் அற்று நிற்கின்றாய். இந்நிலையில் உன்னுடைய அகண்ட அறிவை (அகலறிவு) இழந்தாய். இது வாட்டம் (துன்பம் சிறிதும்) இல்லாத முத்தியினில் நிகழும் "அருட்கேவலம்" என்று அறிவாயாக! "நீ" இந்த நிலையை அடைவதற்கு முன்னர் ஒரு பொழுதும் அனுபவித்து அறியாத கேவலம் (கேவல நிலை) ஆகும். இதனை மாணவனே! நன்கு அறிவாயாக.

## 9. கேவல தரிசனம்

(கேவல நிலையை முற்றிலும் உணர்தல்)

**கேவலத்தை (ஆணவமலத்தை) தரிசிக்க (காண) முடியாதெனல்**

26. ஒன்றும் தெரியா ஒழியா இருளாகி
இன்றளவும் நின்றது இதுவோ தான் - ஒன்றாகிச்
செம்பிற் களிம்புபோல் சேர்ந்து நின்ற ஆணவம் தான்
அம்புநிழல் போல் என்று அறி.

சற்குரு :

பொருட்கள் எதையும் தெரியவிடாத, என்றும் நீங்காத இருள் ஆகி, இந்நாள் வரையும் அறிவை மறைத்து நின்றது இந்த ஆணவ மலமே ஆகும். செம்பினில் களிம்பு கலந்து ஒரு சேர (ஒருமித்து) நிற்கும் தன்மை போல ஆன்ம அறிவைக் கலந்து நிற்கின்ற ஆணவமலமானது, நீரின் நிழல் போலக் காட்சிக்குப் புலன் ஆகாத ஒன்று என அறிவாயாக.

இதனையே கீழ்கண்டவாறும் விவரிக்கலாம். அது எவ்வாறெனில், செம்பும் களிம்பும் போல் அநாதியே (ஆன்மா தோன்றிய காலத்திலிருந்தே) ஆன்மாவை மறைத்துப் பொருந்தியிருக்கும் ஆணவ மலமானது, நீரின் நிழல் போல புலப்பட்டு ஆனால் முற்றிலும் (முழுவதும்) புலனாகாமல், பொருட்களை காணமுடியாத நீங்காத இருள்போல இந்நாள் வரை நிற்கின்றது.

**அருட்கேவல நிலையில் ஆணவமலம் மிகுந்திருப்பதற்கு காரணம் கூறுதல்**

27. கருவி கரணம் கழன்றும் கழலா
இருளின் பெருமை இது என்னோ - இருள்தான்
விடிகைக்கு இருண்ட மிகுதிபோல் மாசு
மடிகைக்கு இருண்டது காண் மற்று.

மாணவன் தனது சற்குவிடம் கீழ்கண்டவாறு கேள்வி கேட்கிறான்.

மாணவன் :

தத்துவங்கள் (கருவி மற்றும் கரணங்கள்) எல்லாம் என்னை விட்டு நீங்கிய பொழுதும் என்னை விட்டு நீங்காத ஆணவமலம் என்ற

இருளின் பெருமிதம் (பெருமை) இதுவோ? என் சற்குருவே விளக்க உபதேசம் அருள்வீராக.

இதனை விளக்கிக் கூறும் விதமாக சற்குருவானவர் கீழ்கண்டவாறு உபதேசிக்கிறார்.

சற்குரு :

விடிவதற்கு (பொழுது புலர்வதற்கு) சிறிது நேரத்திற்கு முன்பு வரை இருளானது அடர்த்தியாக மற்றும் திரண்டு எழுவதைப் போல, இதுவரை உன் அறிவை மறைத்து நின்ற ஆணவமலம் என்ற இருளானது ஒருசேர நீங்கி ஒழிவதற்கு, அருட்கேவலம் என்ற நிலையில் மிகுதியாகக் காட்டுகின்றது என்பதை மாணவனே (சீடனே) அறிவாயாக!

## 10. கேவலாதீதம்

(கேவலத்தில் இருந்து நீங்குதல்)

**கேவலத்தை (ஆணவத்தை) இருள் என்று உணர்ந்தாலே நீங்கும் எனல்**

28. வானில் இரவிவர வல்இருள்போ மாறுபோல்
ஈனஇருள் அகல்வது எக்காலம் - மானே
அறிந்தாய் இருள் என்று அறியாமை தன்னைப்
பிறிந்தாயோ இல்லையோ பேசு.

மாணவன் : ஆகாயத்தில் சூரியன் உதிக்கும்பொழுது, அனைத்துப் பொருட்களையும் கண்களுக்கு புலப்படாமல் மறைத்த அடர்ந்த இருளானது, தன்னுடைய வலிமை இழந்து, தன் செயல் இழந்து, நீங்கும் தன்மை போல என் அறிவை முழுவதும் மறைத்து நிற்கும் ஆணவமலமாகிய இருள் எப்பொழுது என்னை விட்டு நீங்கும்? என் சற்குருவே இதனை விளக்கமாகக் கூறுங்கள்.

சற்குரு :

சிறந்த பக்குவ நிலையை உடைய என் மகனே (மாணவனே)! இந்த ஆணவமலத்தை இருள் என்று "உன்னிலும் வேறுபட்ட ஒன்றாக" உணர்ந்தாய். இவ்வாறு ஆணவமலத்தை இருள் என்று உன்னிலும்

வேறுபட்டதாக உணர்ந்த நீ, அந்த அறியாமையாகிய ஆணவ மலத்திலிருந்து நீங்கி விட்டாயோ? அல்லது நீங்க வில்லையோ? என்பதை ஆராய்ந்து கூறுவாயாக.

இதனைக் கீழ்கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம். அது எவ்வாறு என்றால், சூரியன் உதிக்கும் பொழுது இருளானது நீங்குவது போல உன்னைப் பொருந்திய ஆணவ இருளானது எவ்வண்ணம் நீங்கும் என்று பயப்பட வேண்டாம். எப்பொழுது நீ, ஆணவ மலத்தை இருள் என்றும், அஞ்ஞானம் (அறியாமை) என்றும் உணர்ந்தாயோ, அப்பொழுதே "நீ" ஆணவமலத்தை நீக்கி விட்டாய் என்பதை அறிவாயாக.

அறியாமை வயப்பட்டு ஆணவமலத்தைப் பகுத்து அறியாதிருக்கும் நிலையே ஆணவ மலத்தோடு பொருந்தியிருக்கும் நிலையாகும். ஆணவ மலத்தை தன்னிலும் வேறாக உணர்ந்த நிலையே அதனை விட்டு நீக்கிய நிலை ஆகும்.

**ஆணவ மலத்தை நீக்கும் வழிமுறை கூறுதல்**

29. இந்த இருள் ஒழிய எதும்நான் காண்கிலேன்
இந்த இருள் அகல்வது எப்படியோ -இந்த
அறியாமை நின்றால் அதனை நீ – காணாய்
அறியாது அறிந்தனையோ அன்று.

மாணவன் :

ஆணவமலத்தால் ஏற்பட்ட அறியாமை என்ற இருளை மட்டுமே காண்கின்றேன். வேறு எதனையும் நான் காணவில்லை. இவ்வண்ணம் எல்லாப் பொருட்களையும் மறைத்து, தன்னை மட்டுமே காட்டிக் கொண்டு நிற்கும் ஆணவமலம் என்ற இருள் என்னை விட்டு எப்படி நீங்கும்? - என் சற்குருவே! இவ்விருளை நீக்கும் வழியை உபதேசித்து அருள்வீராக.

சற்குரு :

இந்த அறியாமை என்ற இருள் உனது அறிவை மறைப்பதனால் அதனை நீ, வேறு ஒன்றாகக் (வேறுபடுத்திக்) காண மாட்டாய். ஆகவே, நீ அறியாமையை ஏற்படுத்தும் மலத்தை, இருள் என்று

வேறுபடுத்திக் காணாமல் அதனை இருள் என்று எவ்வண்ணம் அறிவாய்? எப்பொழுது நீ, ஆணவமலத்தை உன்னிலும் வேறுபடுத்தி உணர்ந்தாயோ, அப்பொழுது நீ அதிலிருந்து முற்றிலும் பிரிந்து விட்டாய்.

இதனையே கீழ்கண்டவாறு விவரித்துக் கூறலாம்.

ஆணவ மலத்தால் ஏற்பட்ட அறியாமையை மட்டும், நீ காண்கிறாய் என்று பயப்பட வேண்டாம். நீ அறியாமையோடு பொருந்தி நின்றால், உன்னால் அறியாமை என்று ஒன்று இருக்கிறது என்பதை உணரமாட்டாய். இவ்வாறு இல்லாமல், நீ அறியாமையோடு பொருந்தாமல், அறியாமையை ஏற்படுத்தும் ஆணவமலத்தை உன்னிலும் வேறுபடுத்தி அறிவதால், நீ ஆணவ மலத்திலிருந்து நீங்கி (பிரிந்து) விட்டாய் என்பதை உணர்வாயாக.

## 11. தன்னுண்மை

(தன்னை மும்மலங்களில் இருந்து நீக்கித் தனித்துக் காணுதல்)

**திரோதான சக்தியே அருட்சக்தி ஆகும் எனல்**

30. அந்த மலமாம் அறியாமை கண்டாயே
அந்த அறிவு நீ ஐயனே! - தொந்த இருள்
போனதே உன்னைவிட்டுப் போக்கித் திரோதையருள்
ஆனதே கண்டாய் அறி.

சற்குரு :

ஐயனே! அறியாமையை ஏற்படுத்தும் ஆணவமலத்தை உணர்ந்தாய். இவ்வாறு உணர்த்திய "அறிவே நீ" என்று அறிவாய். இவ்வாறு நீ உணரும் வரை, உன்னை விட்டு பிரியாமல் தொடர்ந்து பொருந்தி நின்ற ஆணவ மலமாகிய இருள் (தொந்த இருள்) இப்பொழுது உன்னை விட்டு முழுவதும் நீங்கியது. இத்தகைய ஆணவ மல இருளை செயல்படுமாறு இயக்கி வந்த இறைவனது திரோதான சக்தியானது, இப்பொழுது அந்த ஆணவ இருளையும் நீக்கி அருட்சக்தி (அருள்புரியும் சக்தி) ஆகி விட்டது. இதனை உன் அனுபவத்தில் உணர்ந்தாய் என்பதை அறிவாயாக. (சற்குருவானவர் தனது மாணவனை ஐயனே என்று அழைப்பது உண்மை ஞானத்தை அடையக் கூடிய பரிபாகம் (பக்குவநிலை) அடைந்த நிலையில் தன் மாணவன் இருப்பதால் ஆகும்.)

இதனைக் கீழ்கண்டவாறு மேலும் விவரித்துக் கூறலாம்.

"அறியாமையே ஆணவமலம் என்று எந்த அறிவினால் உணர்ந்தாயோ, அந்த அறிவே நீ என்று உணர்வாயாக" மேலும் உன்னைப் பொருந்தியிருந்த ஆணவமலமாகிய இருள் நீங்கிய பின்னும், மேலும் ஒருவிதத்தில் மறைக்கப் பட்டிருக்கின்றேன் என்பதை நீ உணர்ந்தால் அஃது உனது ஆணவ இருளைப் போக்கி, உனக்கு இறைவனின் அருளை ஏற்படுத்தும் திரோதாயி (திரோதான) சக்தியின் மறைப்பே என்று அறிவாயாக.

**மும்மலங்களை நீங்கியவன் என்பதை உணர்வாயாக எனல்**

31. வைத்த அவதரங்கள் எல்லாம் உடன் வந்தும்
அத்தகைமை கண்டும் அறியாயால் – முத்தனாய்ப்
பாச அறிவும் பதியறிவும் அன்றியே
ஆக அறவே நின்றவன்நீ ஆம்.

சற்குரு : உன்னுள் அமைந்த தத்துவங்களில் பொருந்தி, ஆராய்ந்து அந்தத் தத்துவங்களை ஒவ்வொன்றாக நீக்கி வந்தாலும், அந்த தத்துவங்களை சடப்பொருள் என்று அறிந்தும், அதனை நீ உணராமல் இருக்கிறாய். முக்தி அடைவதற்கு பக்குவம் (பரிபாகம்) அடைந்தவனாக, பாச அறிவு மற்றும் பதி அறிவு ஆகிய இரண்டும் நீங்கி, மும்மலமாகிய ஆணவம், கன்மம், மாயை ஆகிய முக்குற்றங்கள் முழுவதும் நீங்கி நிற்பவன் நீ ஆகும். (என்பதை உணர்வாயாக.)

இப்பாடலின் விளக்கத்தை இவ்விதமாகவும் கீழ்கண்டவாறு விளக்கிக் கூறலாம்.

தத்துவங்களின் இயல்புகளை ஒவ்வொன்றாக அறிந்தும் உணராதவனாக இருக்கிறாய். உனது அறிவு எவ்வண்ணம் என்றால் மறைக்கும் இயல்பினை உடைய பாச அறிவும் அல்ல மற்றும் எவற்றையும் உணரும் இயல்புடைய பதிஅறிவும் அல்ல. இவ்விரண்டு அறிவிலும் வேறுபட்ட, அறிவித்தால் அறியும் இயல்புடைய பசு அறிவு என்று அறிவாயாக. ஆகையால் தத்துவங்களின் இயல்புகளை உணர்ந்து, அவற்றை முழுவதும் நீக்கி அறிவாயாக. முக்தி அடைந்தவனாக பாச அறிவு மற்றும்

பதியறிவு (பரஞானம்) ஆகிய இரண்டையும் நீக்கி, மும்மலக்குற்றம் நீங்கி நின்றவன் நீ என்பதை உணர்வாயாக.

தத்துவங்களின் இயல்புகளை உணர்ந்து அவற்றை விட்டு நீக்காத வரை பதி அறிவு உடையவன் ஆவான். தத்துவங்களின் இயல்புகளை உணர்ந்து அவற்றை நீக்கியவன், முக்தனாய் தன்னுண்மை உணர்ந்தவன் ஆவான்.

## 12. சைதன்னிய தரிசனம்

(மும்மலங்கள் நீங்கிய சுத்த நிலையில் தன்னைக் காணுதல்)

**ஞானமே நீ என உணர்**

32. கண்ணில் இருள் போனாலும் கண்தன்னைக் காணாபோல
எண்ணும் இருள் போனால் எனை அறிய - எண்ணாதோ
கண்போல் சடமோ நீ காட்டியதும் கண்டு அறிந்த
ஒண்போதம் நீ என்று உணர்.

மாணவன் :

கண்களின் ஒளியை மறைத்த இருளானது நீங்கிய பின்னரும், கண்கள் தனக்குத் தானே தன்னைக் காணமுடியாத தன்மை போல (கண்கள் பிற பொருட்களை வெளிச்சத்தில் கண்டாலும், தனக்குத் தானே பார்க்க முடியாத தன்மை போல), ஆணவமலமாகிய இருள் நீங்கினாலும், என்னை (எனது சொரூபத்தை) அறிய முடியாதோ? - எனது சற்குருவே விடை கூறி அருள்வீராக.

சற்குரு :

கண்களைப் போல நீயும் சடப்பொருளோ? (மாணவனே நீ! சடப்பொருள் அல்ல). இறைவனின் திருவருளால் ஆணவமலம் நீங்கியதை உணர்ந்தவுடன் சந்தேகத்திற்கு இடமின்றி தெளிவு அடைந்து, ஒளியை உடைய ஞானம் (அ) ஒண்போதம் [(ஒண் போதம் என்பது உள்ளதை உள்ளபடி உண்மை நிலையிற் காணும் போதம் (அறிவு)] "நீ" என்பதை உணர்வாயாக. [ஞானசொரூபமே நீ என்பதை உணருவாயாக என்பது உட்பொருள் ஆகும்.]

**உயிரானது சதசத்து எனல்**

33. இருட்கும் ஒளிக்கும் இடமாகும் வான்போல்
அருட்கும் மருட்கும் அகமாய்ச் – சுருக்கம் இல்லா
நீசத்து அசத்து அன்று நேரே சதசத்தன்
ஆய்சத்து அது அசத்து அது ஆம்.

சற்குரு :

இருளும் ஒளியும் இருப்பதற்கு இடம் தரும் ஆகாயம் போல, ஞானத்திற்கும் (அருளுக்கும்), அஞ்ஞானத்தைத் தரும் ஆணவ மலத்திற்கும் இடம் தரும் அகண்ட (விரிந்த) அறிவை உடைய நீ, "சத்து" ம் (பதிப்பொருள்) அல்ல, "அசத்து"ம் (சடமாகிய பாசப்பொருள்) அல்ல. "சத்து" உடன் நீ சேர்ந்தால் "சத்து" ஆகவும், "அசத்து" உடன் நீ சேர்ந்தால் "அசத்து" ஆகவும், சத்து மற்றும் அசத்து ஆகிய இரு தன்மைகளில் சமமாக இருக்கும் இயல்புடைய நீ "சத சத்து" ஆவாய். ஆகவே பதி (இறைவன்) என்றும் சத்து ஆக உள்ளது. பாசம் (மும்மலம்) என்றும் "அசத்து" ஆக உள்ளது. (என்பதை உணருவாயாக)

இதனைக் கீழ்கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம்.

ஆகாயம் ஒன்றே இருள் மற்றும் ஒளி ஆகிய இரண்டிற்கும் இடம் தருவது போல, நீயும் இறைவனின் அருளையும் (ஒளி) பாசத்தின் மருளையும் (இருள்) ஏற்கக் கூடிய கொள்கலம் (பாத்திரம்) ஆவாய். இருப்பினும் நீ அந்த "சத்து" (பதி (அ) இறைவன்) ஆகிய அருளும் (ஒளியும்) இல்லை. அசத்து (பாசம்) ஆகிய மருளும் (இருளும்) இல்லை. இதனால் சத்தின் (பதியின்) இயல்பையும், அசத்தின் (பாசத்தின்) இயல்பையும் சார்ந்து நிற்கும் "சதசத்து" இலக்கணம் (இயல்பு) உடையவன் ஆவாய்.

இருள் மற்றும் ஒளிக்கு இடம் தரும் ஆகாயம் அந்த இருளும் ஆகாமல், ஒளியும் ஆகாமல் அவற்றிலிருந்து வேறாக (வேறுபட்டதாக) இருப்பது போல "சதசத்து" எனப்படும் உயிரானது பதி போலவும் மற்றும் பாசம் போலவும் ஆகாமல் அவற்றிலிருந்து வேறுபட்டதாகவும் ஆகாமல் இருக்கும் இயல்பு உடையதாகும் என்பது உட்பொருள் ஆகும்.

### நீ ஞான சொரூபமானவன் எனல்

34. அறியும் அறிவுநீ அன்றோ உனக்குச்
செறியும்மலம் நின்றதோ செப்பாய் - அறிவுதனைப்
பாராதே பார்த்து அறிந்து பாசப் பழக்கம் அதில்
வாராதது அன்றோ வழக்கு

சற்குரு :

இது "சத்து" (பதி (அ) இறைவன்) என்றும், இது "அசத்து" (பாசம் (அ) மும்மலம்) என்றும், அறியும் அறிவு (ஞானம்) சொரூபமாகிய உயிர் (ஆன்மா) "நீ" ஆகும். இந்த நிலையை அடைந்த உனக்கு, அனாதியே (தொன்று தொட்டு) பந்தித்து (பொருந்தி) நின்ற ஆணவமலம் இப்பொழுது உன்னை (உன் அறிவை) மறைத்து நிற்கிறதா? என்று கூறுவாயாக. ஆணவ மலத்தோடு முன்பு பொருந்தி இருந்த பழக்கத்தால் (பழக்க வாசனையால்) உன் அறிவானது மயங்கி, உனது ஞானசொரூபத்தை உணராமல் (தன்னை உணராமல்) மீண்டும் "பெத்த நிலை" (பாசத்தால் (அ) மும்மலங்களால் கட்டுப்பட்ட நிலை) அடையாமல் இருப்பாயாக. மும்மலங்களின் பழக்க வாசனையை முற்றிலும் நீக்கி (ஒழித்து) ஞான சொரூபமாக நிற்பதே பெரியோர்களின் (ஞானிகளின்) நிலையான பழக்கம். ஆகவே நீயும் ஞானிகளைப் போல ஞானமயமாய் (ஞான (அறிவு) சொரூபமாய்) இருப்பாயாக.

இதனையே கீழ்கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம்.

"ஞான சொரூபமானவன் நீ" இனி உனக்கு மும்மலங்கள் (பாசம்) என்பது இல்லை. ஆகவே மும்மலங்களோடு கூடிய அறிவு என்பது உனக்கு முற்றிலும் இல்லை என்பதை உணர்ந்து, மும்மலங்கள் நீங்கிய ஞானிகளைப் போல இருப்பாயாக என்பது உட்பொருள் ஆகும்.

## 13. ஞான தரிசனம்

(மெய் ஞானமாகிய திருவருளை உணர்தல்)

### இறைவனின் அருட்சக்தியை உணர்வாயாக எனல்

35. அறிந்து அறிந்து வந்த அவதரங்கள் தோறும்
செறிந்து அறிய நின்றது எது தேரின் - பிறிந்து அதனின்
நின்றது அறியாமல் நிகழ்த்தி அது நீக்கி உனை
இன்று அறிய வைத்தது அருள் என்.

சற்குரு :

தத்துவங்கள் ஒவ்வொன்றையும் அறிந்து, அவற்றைச் சடப்பொருள் என்றும் அழியக்கூடியது என்றும் உணர்வதற்கு உரிய உண்மையை "நீ" அறிவதற்கு, உற்ற துணையாக உன்னோடு உடன் நின்று உணர்த்தியது எது? ஆராய்ந்து பார்த்தால் அந்த தத்துவங்களில் இருந்து நீ பிரிந்து, உன்னோடு அது பொருந்தி இருப்பதை நீ அறியாமல் உனக்கு உண்மை ஞானத்தை உணர்த்தி, உன்னை தத்துவங்களில் இருந்து நீக்கித் தத்துவ சுத்தி செய்து, இன்று தன்னையும் நீ அறியுமாறு உன்னை இந்நிலைக்கு கொண்டு வந்து வைத்தது இறைவனது கருணையாகிய திருவருளே (இறைவனின் அருட் சக்தியே) என்பதை அறிவாயாக.

இறைவனுடைய அருட்சக்தியே, உன்னைப் பொருந்தி இருந்த தத்துவங்களை சடப்பொருள் என்று உணர்த்தி, அந்த தத்துவங்களில் இருந்து உன்னை நீங்கும்படிச் செய்தது. அந்த அருட்சக்தியானது, நீ தத்துவங்களை விட்டு முற்றிலும் நீங்கும் வரை, தன்னை உனக்கு வெளிப்படுத்தாமல் (உணர்த்தாமல்), நீ தத்துவங்களை விட்டு முற்றிலும் நீங்கிய இந்நிலையில், தன்னையும் உனக்கு உணர்த்தி, வெளிப்பட்டதை நீ அறிவாயாக என்பது உட்பொருள் ஆகும்.

**தத்துவங்கள் நீங்கத் துணைபுரிவது அருட்சக்தியே எனல்**

36. அந்த அருள் உனக்கு இங்கு ஆதாரமாய் அல்லின்
இந்து என எறிந்திட்டு ஏகமாய் - முந்தி
உனை உனக்குத் தான்விளக்கி ஓவாது உணர்த்தும்
தனை உனக்குக் காட்டுமே தான்.

சற்குரு :

அந்தத் திருவருளே (அருட்சக்தியே) உன்னுடைய இந்நிலையில் (தத்துவங்கள் நீங்கிய நிலையில்) உனக்கு அடிப்படை ஆதாரமாக இருந்து, அடர்த்தியான இருளை உடைய இரவுப் பொழுதில் உதித்த சந்திரனைப் போல, தன்னுடைய அருள் ஒளியால் (அருட்பிரகாசத்தால்) உன்னுடைய அஞ்ஞானமாகிய இருளை நீக்கி, முன்பு தத்துவங்களோடு பொருந்தி நின்ற உன்னை, அந்த

தத்துவங்களில் இருந்து பிரித்து தத்துவ சுத்தி செய்து, உன்னை என்றும் பிரியாமல், உன்னுடன் பொருந்தி நின்று, உண்மை ஞானத்தை உனக்கு உணர்த்திய தன்னையும் தரிசிக்குமாறு (உணருமாறு) அருள்புரிந்தது என்பதை உணர்வாயாக.

இறைவனது அருட்சக்தியே உனக்குத் துணையாக இருந்து உன்னுடைய தத்துவங்கள் எல்லாம் நீங்கி, தன்னையும் - "நீ" உணருமாறு அருள் புரிந்தது என்பதை உணர்வாயாக என்பது உட்பொருள் ஆகும்.

### சற்குரு தன் ஆன்ம அனுபவத்தைக் கூறுதல்

37. எல்லாம் பொய் என்று இங்கு இருந்தேனும் நான் அன்றோ
நல்லாய் எனை அறிந்தேன் நானன்றோ - சொல்லாடும்
நான்பிரமம் அன்றி நடுவே உணர்த்துதற்கு
வான்பிரமம் உள்ளதோ மற்று.

சற்குரு :

தத்துவங்கள் எல்லாம் பொய் என்று உணர்ந்து, அந்தத் தத்துவங்களை எல்லாம் துறந்து (நீக்கி), இந்நிலையில் இருக்கின்றவனும் நான் அல்லவோ. நல்லவனே! என்னை "சித்து" (சித்துப்பொருள்) என்று நன்கு அறிந்தவன் நான் அல்லவோ. இவ்வண்ணம் அறிந்து சொல்லும் நான் "பிரம்மமே" (பிரம்மம் ஆவேன்) அவ்வாறு இல்லாமல் இந்த இயல்பை எனக்கு உணர்த்துவதற்கு, எனக்கும், தத்துவங்களுக்கும் இடையே என்னிலும் உயர்ந்த ஒரு "பிரம்மம்" உள்ளதோ? - இல்லை.

இறைவனின் திருவருளால் (அருட்சக்தியால்) அனைத்துமே மாயை (பொய்) என்று உணர்ந்து, எனது சொரூபத்தையும் நன்கு உணர்ந்து விட்டதால் "நானே பிரம்மம்" ஆனேன். அதனால் வேறு ஒரு பிரம்மம் இல்லை. (இவ்வண்ணம் மாணவனே! நீயும் உணர வேண்டும் என்பது உட்பொருள் ஆகும்.)

சற்குருவானவர் தானும் அந்த இறைவனின் திருவருளால் தன்னை "பிரம்மம்" என்று உணர்ந்ததாகக் கூறுகிறார். அந்த பிரம்ம சொரூபமாகவே பொருந்திய காரணத்தால் வேறு பிரம்மம் என்று ஒன்றும் இல்லை என தனது சீடனுக்கு உணர்த்துகிறார். மேலும் அந்த பிரம்ம சொரூபமாக தனது சீடனும் (மாணவனும்) பிரம்மத்தில் பொருந்தி உணர வேண்டும் என்பதையும் வலியுறுத்துகிறார்.

**அருட்சக்தியே உணர்த்தியது என்பதை உணரவேண்டும் எனல்**

38. அன்று முதல் இன்றளவும் அண்ணல் அறிவிப்பது அன்றி
இன்றுஅறிவேன் நான் என்று இயம்புவதுஎன் – என்றும்
அவத்தைதனில் உணர்த்தி ஆங்கு அருத்தி இன்றித்
தவத்தில் உணர்த்தினர் ஆர்தான்.

சற்குரு :

மாணவனே! பிரபஞ்சம் உயிர்கள் மற்றும் அனைத்தையும் தோற்றுவித்த (உருவாக்கிய) காலத்தில் இருந்து (அன்று முதல்) இன்று வரை இறைவனே உன்னுடன் பொருந்தி இருந்து உனக்கு உண்மையை உணர்த்துகின்றார். இவ்வாறு இல்லாமல் இன்று நீ, உண்மையை உன் சுய முயற்சியால் உணர்ந்தேன் என்று கூறுவது எவ்வாறு? (மாணவனே! இவ்வண்ணம் நீ கூறுவது தவறு ஆகும்.)

உன்னுடைய "சகலம் மற்றும் கேவலம்" ஆகிய இரண்டு நிலைகளில் உன்னுள் பொருந்தி நின்று, உனக்குள் உணர்த்தி சகல மற்றும் கேவல அவத்தைகளின் இன்ப துன்பங்களை நீ அனுபவித்து, சகல மற்றும் கேவல அவத்தைகளில் இருந்து நீ நீங்கிய பொழுது, இப்பொழுது நீ பொருந்தி இருக்கும் "சுத்தம்" என்ற அவத்தை நிலையில் உனக்கு மெய்ஞானத்தை உணர்த்தியவர் யார்? அந்த இறைவனின் அருட்சக்தியே என்பதை உணர்வாயாக.

இதனைக் கீழ்கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம்.

மாணவனே! நீ தத்துவக் கருவிகளுடன் (மும்மலங்களுடன்) கூடிய காலத்தில் இருந்து, இப்பொழுது மும்மலங்கள் நீங்கிய காலம் வரை இறைவனின் அருட்சக்தியே உனக்கு உணர்த்தியது என்பதை "நீ" உணராமல் நீயே உணர்ந்ததாகக் கூறுவது தவறு ஆகும். இறைவனின் அருட்சக்தியே உன்னுடன் கூடி நின்று சகலம், கேவலம், சுத்தம் ஆகிய நிலைகளில் (அவத்தைகளில்) படிப்படியாக மெய்ஞானத்தை உனக்கு உணர்த்தியது. நீ மும்மலங்களுடன் கூடி நின்றபொழுது இன்பதுன்பங்களை உன்னை அனுபவிக்கச் செய்து, அந்த மும்மலங்களையும் நீக்கி, இப்பொழுது பரிபூரணத்தை உணரும் தவத்தினில் (நிட்டையில்) உன்னைப் பொருந்தச் செய்ததும் இறைவனின் அருட்சக்தியே ஆகும் என்று உணர்வாயாக.

**ஞானத்தை உணர வைப்பது அருட்சக்தியே எனல்**

39. உன் அறிவை நீயே உணர்வையே ஆம் ஆகில்
இந்நெடு நாள் பாசத்து இயையாயே – உன் அறிவை
நீங்கா அறிவாகி நீரும் இரதமும் போல்
ஆம்காண் ஆரனார் அருள்.

சற்குரு :

உனது "ஞானத்தை" நீயே வேறுதுணை (அருட்சக்தி துணை) இல்லாமல் அறிந்தாய் என்றால், நெடுநாட்களாக (பல காலங்களாக) அதாவது பல பிறவிகள் நீ எடுத்த பொழுதும், மும்மலத்தில் (பாசத்தில்) மூழ்கி, பிறந்து மற்றும் இறந்து (பிறவி சுழற்சியால்) துன்பம் அடைந்திருக்க மாட்டாய்.

தண்ணீரும் அதன் சுவையும் போல உனது அறிவை விட்டு என்றும் நீங்காத அறிவாக இருந்து, உயிர்களை பாசத்திலிருந்து (மும்மலங்களில் இருந்து) நீக்கி, முக்திப்பதம் சேர்க்கும் இறைவனது அருட்சக்தியே உன்னை இந்நிலைக்கு உயர்த்தியது என்பதை மாணவனே! உணர்வாயாக.

உயிரானது மெய் ஞானத்தை உணர்ந்து பிறவாவரம் பெறுவதற்கு இறைவனின் அருட்சக்தியே ஆதாரம் ஆகும் என்பது உட்பொருள் ஆகும்.

**அருட்சக்தியுடன் ஒடுங்கினால் பிரம்மம் ஆவாய் எனல்**

40. உன் அறிவுக்கு உள்ளே உணர்வாய் ஒழியாத
தன் அறிவு தான் உனக்குத் தாரகமாய்ப் – பின்னம்அற
ஒன்றாய் ஒழியாமல் உள் அடங்கி உள்ளபடி
நின்றால் அது ஆவை நீ.

சற்குரு :

உன் அறிவுக்குள்ளே உணர்ச்சியாக (அறிவாக) என்றும் பிரியாமல் பொருந்தி இருக்கும் இறைவனின் அருட்சக்தியே, உனக்கு அடிப்படை ஆதாரமாக, பேதமின்றி உன் அறிவில் கலந்து ஒன்றாக இருக்கிறது. உன்னுடைய அந்த (அருட்சக்தியின்) உணர்வை விட்டு நீங்காமல், உன் செயல் அற்று, அருட்செயலில் பொருந்தி இருந்தாய் என்றால் நீ அந்த திருவருளே ஆவாய் (நீ அது ஆவாய்.)

இதனைக் கீழ்கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம். உனது அறிவுக்குள்ளே உணர்வாக, என்றும் நீங்காமல் இருந்து, இறைவனின் அருட்சக்தியின் ஞானமே, உனக்கு அடிப்படை ஆதாரமாக இருந்து வழி நடத்துகிறது.

மாணவனே! நீயும் வித்தியாசம் எதுவுமின்றி (பேதம் இன்றி) அந்த அருட்சக்தியில் இரண்டறக் கலந்து நின்று, அந்த அருட்சக்தியை விட்டு நீங்காமல், அந்த அருட்சக்தியின் உள்ளே அடங்கி (ஒடுங்கி) நின்று, அருட்சக்தியின் இயல்பின்படி இருந்தால், நீ அந்தப் "பிரம்மம்" ஆவாய்.

**மூவகை சக்திகள் கூறுதல்**

41. இச்சை உயிர்க்கிரங்கல் ஞானம் இசைந்து உணர்த்தல்
வைச்ச கிரியை வயநடத்தல் – நிச்சயமாஞ்
சத்திஇவை மூன்றினையும் தந்தது ஒரு சத்திகாண்
முத்தனே பார்நீ முயன்று.

சற்குரு :

இச்சா சக்தி என்பது உயிர்களிடம் பொருந்தி நின்று அந்த உயிர்களின் மீது கருணை (இரக்கம்) கொண்டிருப்பது ஆகும்.

ஞானசக்தி என்பது உயிர்களை விட்டு என்றும் பிரியாமல், உயிர்களின் அறிவுக்கு அறிவாய் பொருந்தி இருந்து உயிர்களுக்கு மெய்ஞானத்தை உணர்த்துவது ஆகும்.

கிரியா சக்தி என்பது உயிர்களானது பிறவிதோறும் செய்த கன்ம வினைகளுக்கு ஏற்ப, இன்ப துன்பங்களை அனுபவிக்குமாறு செயல் படுத்துவது ஆகும்.

இந்த இச்சா, கிரியா, ஞான சக்திகளின் இயக்கமே உயிர்களிடத்தில் (ஆன்மாக்களிடம்) உண்மையாக (நிச்சயமாக) நிகழும் நிகழ்ச்சி ஆகும்.

இந்த மூவகை சக்திகளையும் தந்தருளுவது ஒரு சக்தி ஆகும். அதுவே பரை சக்தி (பராசக்தி (அ) ஆதிசக்தி) என்பதை மாணவனே அறிவாயாக.

முக்தனே (முக்தி அடைவதற்கு உரிய பக்குவ நிலையைப் பெற்ற மாணவனே)! நீ அந்த பரை சக்தியை இடைவிடாமல் ஆராய்ந்து நன்கு அறிந்து உணர்வாயாக.

இப்பாடலில் சற்குருவானவர் தனது மாணவனை முக்தனே என்று அழைப்பது, மாணவன் முக்தி பெறுவதற்கு உரிய பக்குவ நிலையை பெற்றிருப்பதை அறிந்திருப்பதால் தான் ஆகும்.

இதனைக் கீழ்கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம்.

பறை சக்தியே அதன் தொழில் வேறுபாட்டால் (வேறுபட்ட செயல்களால்) இச்சை, ஞானம், கிரியை என்று மூன்று வகைப்படும். அவற்றுள் இச்சா சக்தியானது உயிர்களின் மீது இரக்கம் கொண்டிருக்கும், ஞான சக்தியானது உயிர்களுக்கு ஞானத்தை உருவாக்கும். கிரியா சக்தியானது உயிர்களின் கன்ம வினைகளை அனுபவிக்குமாறு செய்யும். ஆகையால் மாணவனே! பறை சக்தியினை உணர்வாயாக.

பூதப்பழிப்பு முதல் ஞான தரிசனம் வரை உள்ள 13 (பதிமூன்று) உணர்வு நிலைகளும் "சுத்தாவத்தையில் சாக்கிரம்" ஆகும். இதனுள் தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவசுத்தி, ஆன்ம ரூபம் என்ற 4 (நான்கு) தச காரியங்கள் அடங்கும். சுத்த சாக்கிர நிலையில் சீவ (ஆன்ம) போதம் முளைத்து நான் பிரம்மம் என்று தோன்றும்.

ஆகையால் சுத்த சாக்கிரம் "போத நிலை" என்று அழைக்கப் படும்.

## 14. பறை தரிசனம்

(பராசக்தியை தரிசனம் செய்யும் (உணரும்) நெறியை உபதேசித்தல்)

**பராசக்தியின் இலக்கணம் கூறுதல்**

42. கிரியை அறிவு இச்சை கிளர்ந்த சத்தி ஏதோ
பெரியபரா சத்திஎனப் பேசாய் - தெரியில் அது இங்கு
ஆரும் அறியா அகண்டபரி பூரணமாய்ப்
பேரறிவாய் நிற்கும் பெற.

சற்குரு :

இச்சா, கிரியா, ஞான சக்திகள் ஆகிய மூன்றும் தோன்றுவதற்கு காரணமான மூலசக்தி (ஆதிசக்தி) எதுவோ, அதனை பெருமையுடைய (பெரிய) "பராசக்தி" (பறை) என்று

கூறுவாயாக. நன்கு ஆராய்ந்து பார்த்தால் பராசக்தியானது ஞானியர் தவிர்த்து எவராலும் (யாராலும்) அறியப்படாத “அகண்ட பரிபூரணம்” (அகண்டாகார நித்திய வியாபகப் பொருள்) ஆகும். அந்தப் பராசக்தியே உயிர்கள் (ஆன்மாக்களுக்கு) மெய்ஞ்ஞானத்தை உணரும் வண்ணம், உயிர்களுக்கு மெய்ஞ்ஞானத்தை உணர்த்தி, பேரறிவாகிய இறைவனது பராசக்தியாய் விளங்கும்.

**பரையின் இயல்பு கூறுதல்**

43. அந்த அறிவும் அறிவு அன்றோ இப்போது
தந்த அறிவும் அது தான் அன்றோ – வந்த
அறிவிற் கிளைத்தது காண் அவ்வறிவு இங்கு ஏதோ
நினைவிற் கிளைப்பு அற்ற நேர்.

சற்குரு :

அந்த அறிவும் (உயிர்கள் உணர்ந்த ஆன்மபோத அறிவும்) பேரறிவாகிய “பரஞானம்” என்று கூறப்படும் பராசக்தியே ஆகும்.

இந்நிலையில் உனக்கு அருளிய மெய்ஞ்ஞானமும், அந்த பராசக்தியே அருளியது ஆகும்.

நீ பெற்ற மெய்ஞ்ஞான அறிவும், அகண்ட பரிபூரணபரை (பராசக்தி) யின் பேரறிவிலிருந்து தோன்றியது ஆகும் என்பதை உணருவாயாக.

நீ பெற்ற மெய்ஞ்ஞான அறிவு, இந்நிலையில் எத்தகைய தன்மை (இயல்பு) உடையது என்பதை ஆராய்ந்து பார்த்தால், பரையை (பராசக்தியை) தரிசித்த (உணர்ந்த) நிறைவினால், உன்னுடைய ஆன்மபோத முனைப்பை நீங்குமாறு (ஆன்மாவே நான் என்ற உணர்வை நீக்கும் விதமாக) செய்த தன்மையை உடையது ஆகும் என்பதை உணருவாயாக.

இதனைக் கீழ்கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம்.

நீ மெய்ஞ்ஞானத்தைப் படிப்படியாக உணர்ந்த அறிவும் பரை அருளிய அறிவே ஆகும். இப்பொழுது மெய்ஞ்ஞானத்தை நீ உணருவதற்கு ஏற்ற அறிவை அருளியதும் (தந்ததும்) பரையே. (பராசக்தியே) ஆகும். ஆகவே உன்னுடைய அறிவானது பரை அறிவிலிருந்து (பேரறிவில் இருந்து) தோன்றியது ஆகும். ஆகவே நீ

பெற்ற மெய்ஞானமானது பரை தரிசனத்தின் (உணர்வின்) நிறைவில் ஏற்பட்டது ஆகும். பரையால் (பராசக்தியால்) அன்றி மெய்ஞானம் ஏற்படாது என்பதை உணருவாயாக.

அதுவே (பரையை) உயிர்களின் அறிவாவது ஆகும். உயிர்களுக்கு அறிவு தந்ததும் பரையே ஆகும். அவ்வறிவே (பரையே) எல்லா உயிர்களுக்கும் அறிவு விளங்குவதற்கு (பெருகுவதற்கு) காரணம் ஆகும். அந்த நிறைந்த அறிவில் (பேரறிவாகிய பரையில்) தோன்றாத அறிவு என்று எதுவும் இல்லை என்பது உட்பொருள் ஆகும்.

## பரை ஞானத்தைப் பொருந்துக எனல்

44. அறிவார்க்கு அறிவித்திங் அல்லாதது ஆகா
அறிவாய் விகற்பம் அறியா - அறிவே காண்
கண்பெற்றார் கண்ட கதிரொளிபோற் கண்டு அதனை
விண்பற்றாய் நில்லதிலே மேல்.

சற்குரு :

மெய்ஞானத்தை உணரும் பக்குவநிலை உடையவர்களுக்கு மெய்ஞானத்தை உணர்த்தி, பக்குவ நிலை இல்லாதவர்களுக்கு (அபக்குவர்களுக்கு) உணர முடியாத அறிவாக பரையானது (பராசக்தியானது) இருக்கும்.

இவ்வண்ணம் பரையானது பக்குவநிலை உடையவர்களுக்கும் பக்குவநிலை இல்லாதவர்களுக்கும் வேறுபாடு உடையதாகத் தோன்றினாலும், பரையானது அனைவருக்குள்ளும் வேறுபாடு இன்றிப் பொருந்தி இருக்கும். அத்தகைய பரை அறிவை (பேரறிவை) உணருவாயாக.

கண் பார்வை அற்றவர்கள், பார்வைக்குறைபாடு (குருடு) நீங்கி, சூரிய ஒளியைக் கண்டு மகிழ்வதைப் போல பரையாகிய அந்த அறிவைக் (பரை ஞானத்தை) கண்டு தரிசித்து, நீ அந்த பரை அறிவில் பொருந்தி, அந்த பரை ஞானத்தில் விளங்குவாயாக (நிற்பாயாக).

## 15. பரையில் வியாத்தம்

[பரையின் வியாபக (அகண்ட) அறிவில் (பரைஞானத்தில்) உயிர் அறிவு (ஆன்ம அறிவு) ஒடுங்கி, பரை அறிவாய் நிற்றல்]

### மோன நிலை தோன்றுதல்

45. விண்ணில் கதிரோன் விளங்கி விரிந்ததுபோல்
கண்ணில் கதிரோன் கலந்ததுபோல் – நண்ணிப்
பரைநிறைவில் நீயும் பதிவையே யாகில்
உரையிறந்திட்டு ஒன்றாவை உற்று.

சற்குரு :

ஆகாயத்தில் விளங்கும் (இருக்கும்) சூரியனின் கிரணங்கள் (சூரியஒளி) உலகம் எங்கும் விரிந்த (ஒளிவீசும்) தன்மை போல, அகண்ட பரிபூரண பரை (பராசக்தி) யின் நிறைவில் (உணர்வில்) சூரிய ஒளியும் கண்களும் கலந்து ஒன்றாகுமாறு இருப்பது போல (கண்ணில் சூரிய ஒளி கலப்பது போல) நீயும் பரை ஞானத்தை உணர்ந்து, பரையின் சர்வ வியாபகத்தில் சேர்ந்து, பரை ஞானத்தில் ஒடுங்கி (அடங்கி) இருந்தாய் என்றால், நீயும் பரை ஞானத்தில் (பரை அறிவில்) அடங்கி, "மௌனமாய் (மோனமாய்)" அந்தப் பரையுடன் இரண்டறக் கலந்து ஒன்றாவாய்.

பரை ஞானத்தை உணர்ந்து, அந்த பரை ஞானத்தில் ஒடுங்கினால், மோன நிலை (பேச்சற்று (அ) உரை இறந்து) பெற்று, பரையோடு இரண்டறப் பொருந்தி, தன் செயல் அற்று அருட்செயலாய் விளங்குவாய் என்பது உட்பொருள் ஆகும்.

## 16. பரையில் யோகமும் போகமும்

(பரையோடு இரண்டறக் கலந்து தன் செயல் அன்று இருப்பதும் பின்னர் பரையாகவே மாறி போகத்தை அனுபவிப்பதும் ஆகும்)

### பரையோகம் மற்றும் பரைபோகம் கூறுதல்

46. விண்ணில் விகற்பம் அற மேவியகால் நின்றதுபோல்
நண்ணும் பரையதனில் நண்ணியே – எண்ணிறந்து
நீர் உறங்கும் தன்மைபோல் நிற்கைபரை யோகம் அதில்
சீர்உறலே போகம்எனச் செப்பு.

சற்குரு :

ஆகாயத்தை இடமாகக் கொண்டு நிற்கின்ற (இருக்கின்ற) "காற்று" வேறுபாடுகள் எதுவும் இல்லாமல் ஆகாயத்தைப் போல எங்கும் பரந்து, விரிந்து ஆகாயத்துடன் நிற்கின்ற தன்மை போல, அனைத்திலும் வியாபகமாய் கலந்து பிரபஞ்சம் மற்றும் உயிர்கள் உட்பட அனைத்தையும் இயக்கும் பராசக்தியில் (பரையில்) வியாப்பியமாக அடங்கி, நீரானது (தண்ணீரானது) சலனமற்று (அசைவற்று) இருக்கும் தன்மைபோல, "தன் செயல் இன்றி இருக்கும் நிலை" "பரையில் யோகம் (பரையோகம்)" என்று கூறப்படும்.

இதனையே கீழ்கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம்.

ஆகாயத்துடன் காற்றானது வேறுபாடு இன்றி இயங்குவது போல தன் செயல் அற்று இருக்கும் நிலை பரையில் யோகம் (பரையோகம்) என்றும், அந்த பரையோக அனுபவ நிலையை அடைந்து பேரின்பம் பெறுவதே பரை போகம் (பரைபோகம்) என்றும் கூறப்படும்.

ஒரு வியாபகப் பொருளில் வெறொரு பொருள் வியாப்பியமாய் அடங்கி, அந்த வியாபகப் பொருளாய் நிற்பதும், தன் இயல்பு இன்றி அந்த வியாபகப் பொருளாய் இயங்குவதும் பரையோகம் மற்றும் பரைபோகம் என்று கூறப்படும்.

பரை தரிசனம், பரையில் வியாத்தம், பரையில் யோகமும் பரையில் போகமும் ஆகிய நான்கு நிலைகளும் ''சுத்த அவத்தையில் சொப்பனம் (சுத்த சொப்பணம்)" ஆகும். இந்த நிலையில் ஆன்மாவானது. (உயிரானது) திருவருளோடு கூடி "நானே ஐந்தொழில் (பஞ்சகிருத்தியம்) இயற்றுகின்றவன்" என்ற முனைப்போடு இருக்கும். இந்நிலையில் தசகாரியங்களில் ஆன்ம தரிசனம் மற்றும் சிவரூபம் ஆகியவை நிகழும் (ஏற்படும்) அல்லது ஆன்ம தரிசனம் மற்றும் சிவரூபம் ஆகிய இரண்டையும் ஆன்மாவானது (உயிரானது) உணரும்.

## 17. சுத்தபராயோகமும் முத்தி சாக்கிரமும்

(ஆன்ம சுத்தி பெற்று சிவத்தை தரிசித்தல்)

**பரசிவஞானத்தில் பொருந்தும் நெறிமுறை கூறுதல்**

47. நீங்காத பேரறிவு நீங்காமல் கண்டு நீ
நீங்காமல் நின்றபடி நின்று அதனின் – நீங்காமல்
நின்றுவிடல் அன்றோ நின்மலன்தன் பேரறிவில்
ஒன்றுபடல் என்னும் உரை.

சற்குரு :

மாணவனே! உயிர்களை விட்டு என்றும் நீங்காத பேரறிவாகிய பரைஞானத்தை விட்டு நீங்காமல் தரிசித்த (உணர்ந்த) நீ, இனி அந்தப் பரைஞானத்தை விட்டு விலகிவிடாமல், அந்த பரை ஞானத்தில் பொருந்தி இருப்பாயாக. எக்காரணத்தைக் கொண்டும் உயிர்களானது பரைஞானத்தை விட்டு நீங்காமல் பொருந்தி இருந்தால் மட்டுமே "நின்மலனாகிய பரசிவத்தின் பேரறிவில் பொருந்த முடியும்" (ஒன்றாக கலக்க முடியும்) என்று இறைவன் அருளிய சிவாகமங்கள் உபதேசிக்கின்றது (கூறுகின்றது.)

பரை ஞானத்தை உணர்ந்து அந்தப் பரையின் இயல்பாகவே இருந்தால் மட்டுமே, பரசிவத்தின் ஞானத்தில் இரண்டறக் கலக்க முடியும் என்பது உட்பொருள் ஆகும்.

**சுத்த பராயோகம் மற்றும் முத்தி சாக்கிரம் இலக்கணம் கூறுதல்**

48. எத்திசையும் ஒன்றாம் இறையறிவிலே அழுந்தல்
சுத்தபரா யோகமெனச் சொல்லுமே – நித்தமறை
அத்தன்மை கண்டால் அது முத்தி சாக்கிரமாம்
சித்தமயல் அறவே தேர்.

சற்குரு :

பிரபஞ்சம் மற்றும் உயிர்கள் உட்பட அனைத்திலும் ஏகமாய் வியாபித்து விளங்கும் இறைவனின் பேரறிவிலே (ஞானத்திலே) ஒடுங்கி (அழுந்தி) இருப்பது "சுத்தபராயோகம்" என்று நித்தியமாக உள்ள சிவாகமங்கள் கூறும். அத்தகைய சுத்த பராயோகத்தில்

பொருந்தி உணரும் இயல்பு (தன்மை) முத்தி (முத்தி) சாக்கிரம் எனப்படும். அதனை உனது சித்தத்தில் உள்ள மயக்கம் நீங்கும் படியாக உணர்வாயாக.

இறைஞானத்தில் பொருந்துதல் "சுத்த பராயோகம் ஆகும். சுத்த பராயோகத்தில் பொருந்தி உணரும் தன்மை முக்திசாக்கிரம்" என்பது உட்பொருள் ஆகும்.

## 18. சாக்கிராதீதம்

### சாக்கிராதீதம் இலக்கணம் கூறுதல்

49. நின்ற அறிவு அறிகை நீங்காமை சாக்கிரமாம்
அன்றி அவிழ்தல் அதீதமாம் – சென்று அறிவை
நீங்காமை நின்று நெடிது துயில்கொளவே
வாங்காது அறிவாய் வர.

சற்குரு :

பரை அறிவுடன் பொருந்தி நின்ற உணர்வை விட்டு நீங்காமல் இருப்பது "சாக்கிரம்" ஆகும். இந்த பரை அறிவையும் விட்டு நீங்குவது "சாக்கிராதீதம்" ஆகும்.

பரை அறிவை (உணர்வை) விட்டு நீங்காமல் பொருந்தி இருந்து, நீண்ட தியான (தவ) நிலையில் இருந்தால் மட்டுமே சாக்கிராதீதம் தோன்றி, இறைஞானம் (பரசிவஞானம்) தோன்றும்.

இதனைக் கீழ் கண்டவாறும் விளக்கிக் கூறலாம்.

பரை அறிவோடு நீங்காமல் பொருந்தி இருக்கும் உணர்வை நீங்காமல் இருப்பது "சாக்கிரம்" ஆகும்.

பரை அறிவானது விரிதலே (பெருகுவதே) "சாக்கிராதீதம்" ஆகும்.

இந்த சாக்கிராதீதத்தில் பொருந்திய தவநிலையில் இருப்பவர்களுக்கு (நெடிது துயில் கொள்வார்க்கு) "பரையில் அதீதம்" என்ற உணர்வு எளிதில் ஏற்படும்.

## 19. பரையிலதீதம்

(பரையில் அதீதம்)

(சாக்கிராதீதம் என்ற உணர்வு நிலையை விட்டு நீங்குதல்)

**பரையில் அதீதம் இலக்கணம் கூறுதல்**

50. இவ்வறிவு காண்டல் இருள்தீரும் சாக்கிரமாம்
அவ்வறிவு காணாதது அதீதமாம் – இவ்விரண்டும்
பாராமல் நிற்றல் பரையில் அதீதமாம்
ஆரா அறிவு அகன்ற தால்.

சற்குரு :

பரை அறிவை உணர்தல் என்பது அஞ்ஞானமாகிய இருளை நீக்கக் கூடிய "சாக்கிரம்" ஆகும்.

பரை அறிவையும் (சாக்கிரத்தையும்) விட்டு நீங்கி இருக்கும் உணர்வே "சாக்கிராதீதம்" ஆகும்.

சாக்கிரம் மற்றும் சாக்கீராதீதம் ஆகிய இரண்டு உணர்வுகளையும் நீங்கி இருக்கும் உணர்வே "பரையில் அதீதம்" ஆகும். மாணவனே! "பரையில் அதீதம் என்ற உணர்வு நிலையும் நீங்கினால் பரசிவஞானம் (ஈசனறிவு) தோன்றும்.

சாக்கிரம், சாக்கிராதீதம் ஆகிய இரண்டு உணர்வுகளையும் கடந்து நிற்கும் உணர்வு பரையில் அதீதம் ஆகும். பரையில் அதீதத்தில் அஞ்ஞான இருள் முற்றிலும் நீங்கும். இதுவே பரசிவ ஞானம் தோன்றுவதற்கு அடிப்படை ஆதாரம் ஆகும்.

**ஈசனறிவு தோன்றும் விதம் கூறுதல்**

51. ஈசனறிவு ஆகி எல்லாம் இன்று கழன்று அகன்றாய்
பாசம்மிக வைத்து அதனில் பற்றாதே – கூசாமல்
நேராக நீங்கி அதில் நின்ற சுவடு அறவே
வாராய் சிவமேல் வர.

சற்குரு :

மாணவனே! பரையில் அதீதம் என்ற உணர்வு நிலையில் பொருந்தி இருந்து, பரையில் அதீதம் என்ற உணர்வு நிலையையும் நீங்கும் பொழுது, பரசிவஞானம் (ஈசனறிவு) உனக்குள் தோன்றி, "நான் – எனது" என்ற முனைப்பும், அனைத்து மலங்களும் (அனைத்து தத்துவங்களும்) ஒரு சேர (மொத்தமாக) நீங்கி "சுத்தன்" ஆவாய்.

ஆகவே நீ, நீங்கிய "தனு, கரண, புவன போகங்களின்" பழக்க வாசனையால், ஆசைகளை (பற்று) மீண்டும் அவற்றோடு வைத்து, அவற்றோடு சேராமல், இனி சிறிதும் கூச்சப்படாமல் தனு, கரண, புவன, போகங்களோடு (தத்துவக் கருவிகளோடு) கூடி நின்ற பழக்க வாசனையும் முற்றிலும் நீங்கும் வண்ணம், அவற்றிலிருந்து முற்றிலும் நீங்கி, மாணவனே! நீ பரசிவத்தோடு சேர வருவாய் (சிவமேல் வர வாராய்)

பரையில் அதிதம் என்ற உணர்வு நீங்கும்பொழுது பரசிவஞானம் (ஈசனறிவு) தோன்றி, மும்மலங்கள் முற்றிலும் வேரோடு நீங்கும். மும்மலம் நீங்கும் பொழுது, மும்மலத்தால் பொருந்தியிருந்த தனுகரணபுவன, போகங்களின் பழக்க வாசனையால் மீண்டும் பற்றுகள் (ஆசைகள்) தோன்றினாலும், அவற்றையும் (அந்த பழக்க வாசனையும்) நீக்கினால், மும்மலங்கள் எளிதில் நீங்கிவிடும். மும்மலங்கள் நீங்குவதால் மட்டுமே பரசிவத்தோடு (பரசிவ ஞானத்தில்) பொருந்த முடியும்.

சுத்த பராயோகம், சுத்த சாக்கிரம், சாக்கிராதீதம், பரையில் அதிதம் என்ற நான்கு உணர்வு நிலைகளும் சுத்தாவத்தையில் "சுழுத்தி" என்று கூறப்படும்.

சுத்தாவத்தையின் சுழுத்தி நிலையில், தசகாரியங்களில் சிவதரிசனம் மற்றும் ஆன்மசுத்தி ஒருமித்து நிகழும்.

## 20. சுத்தாவத்தை

(சுத்த அவத்தை)

(சுத்தாவத்தை நிலையில் உயிரானது இறைவனோடு பொருந்தி இறைபணி செய்து மும்மலங்களை முற்றிலும் நீக்கி பிறவாவரம் பெறும்)

### சுத்தாவத்தை இலக்கணம் கூறுதல்

52. அறிவு அடையச் சென்று அங்கு அதீதமாய் நின்ற
குறிஇறந்திட்டு ஒன்றுங் குறியா - நெறிஎது
சுத்தவத்தை மைந்தாஉன் தொல்லைமலம் இல்லை இல்லை
அத்துடனே செல்வது அதுஆம்

சற்குரு :

பரசிவஞானம் என்பதை உணரும் பொழுது "பரையில் அதீதம்" என்ற உணர்வு நிலையானது நீங்கி விடும். அப்பொழுது தத்துவங்கள் (மும்மலங்கள்) எதனையும் அறியா நிலை (நெறி) ஏற்படும். என் மகனே (மைந்தா) அந்நிலை "சுத்தாவத்தை" என்பதை உணர்வாயாக. அப்பொழுது உன்னைப் பிறவித் துன்பத்தில் மூழ்க வைப்பதற்குக் காரணமான மும்மலங்கள், உனக்குச் சிறிதும் இல்லை.

சுத்தாவத்தை நிலையில் நீ பரசிவத்தோடு பொருந்தி நிற்பதால் மும்மலங்கள் முற்றிலும் அழிந்து போகும்.

பரசிவஞானத்தை உணரும் பொழுது மும்மலங்கள் முற்றிலும் நீங்கும். பரசிவஞானத்தை உணரும் நிலையே "சுத்தாவத்தை" ஆகும்.

குருவுக்கு சீடன் (மாணவன்) என்பவன் மகனைப் (மைந்தனைப்) போன்றவன் என்பது குருசீட பரம்பரை மரபு ஆகும். இப்பாடலில் ஸ்ரீ சிற்றம்பல நாடிகள் அவர்களின் சீடன் சுத்தாவத்தை நிலையை அடைந்ததால் இனிப் பிறவாவரம் பெறும் அரிய துரிய நிலையை அடைந்த மகிழ்ச்சியால், ஸ்ரீ சிற்றபம்பல நாடி சுவாமிகள் தனது சீடனை "மைந்தா" என அன்புடன் அழைத்து உபதேசம் செய்கிறார்.

## 21. சுகரூபம்

(சுகசோதியை தரிசித்தல்)

**சுகப்பிரபையால் சிவபூமியை தரிசிப்பாய் எனல்**

53. பைய இருந்து பதைப்பு அற்ற பின்உனக்குத்
துய்ய சுகப்பிரபை தோன்றுமே - ஐயனே
கண்டாய் சிவபூமி காட்சி அறக்கலந்து
கொண்டு ஆள்வன் கண்டாய் குறித்து

சற்குரு : ஐயனே! (என் அருமை மகனே) "நீ" சிறிது சிறிதாக நீக்கி வந்த உன்னுடைய சீவபோதம் (உயிரின் சிற்றறிவு) [உயிரானது தத்துவக் கருவிகளுடன் (மும்மலங்களுடன்) கூடியிருக்கும் வரை

சிற்றறிவு உடையதாக இருக்கும். மும்மலங்கள் நீங்கிய பின் உயிரானது பேரறிவு உடையதாக இருக்கும்] நீங்கும் பொழுது ஏற்படும் பதைப்பு (படபடப்பு) நீங்கியபின், உனக்கு தூய்மையான பரம சுகத்தின் பிரகாசம் (சுகப்பிரபை) தோன்றும். இந்நிலையில், "நீ" பரம சுகத்தைத் தரும் சிவபூமியை (சிவலோகத்தைக்) காண்பாய். அப்பொழுது "காண்பவன் - காட்சி - காட்சிப் பொருள்" என்னும் வேறுபாடுகள் நீங்கி, சிறப்பான வகையில் உன்னோடு பரசிவமானது இரண்டறக் கலந்து உன்னை ஆட்சி செய்வான். (ஆண்டருளுவான்) இத்தகைய உணர்வு நிலையை நீ அனுபவத்தில் காண்பாய்.

**பரம சுகம் விளையும் விதம் கூறுதல்**

54. விழுந்த அவதாரத்தில் விஞ்சு சுகந்தான்
எழுந்தது இது எங்கே இறைவா - மொழிந்து அருளாய்
மாமணியில் சோதி மலர்ந்த பிரபைபோல்
ஆம் அரன்தன் பாலே அது.

சீடன் (மாணவன்) :

இறைவா! (என் குருநாதனே) நான் மும்மலங்களின் துன்பங்களில் இருந்து நீங்கி, எனது சற்குருவாகிய தங்களின் திருவடிகளில் சரணடைந்து, தங்களின் திருவடிகளையே தஞ்சம் என்று பொருந்தி இருக்கும் இந்நிலையில் இத்தகைய பெரிய சுகம் (பரமசுகம்) என்பது எங்கிருந்து தோன்றியது? அதனை உபதேசித்து அருள வேண்டும்.

சற்குரு :

உன்னுடைய மும்மலங்கள் நீங்கிய சுத்தாவத்தை நிலையில் உனக்குள் ஏற்பட்ட பரசிவ ஞான உணர்வின் காரணமாகத் தோன்றிய "பரமசுகம்" என்பது மாணிக்க மணியில் தோன்றிய சோதி (ஒளி) பிரகாசிப்பது போல, உயிர்களின் (ஆன்மாக்களின்) அஞ்ஞானத்தை நீக்கிப் பேரின்பத்தை அருளும் இறைவனின் இயல்பாக உள்ள தன்மையால் தோன்றுவது ஆகும். உன்னுள்ளும் பரசிவஞானத்தால் விளைந்த பரமசுகம் தோன்றியது என்பதை உணர்வாயாக.

சுத்தாவத்தை நிலையில் பரசிவஞானத்தை உணர்வதால் பரமசுகம் தோன்றுகிறது என்பது உட்பொருள் ஆகும்.

**பரமசுகத்தை அனுபவிக்குமாறு கூறுதல்**

55. துன்பம் அற்ற இந்தச் சுகப்பிரபை தன்னையே
இன்பசக்தி என்று அறி நீ எப்போதும் - அன்பு உறவே
நின்று அதிலே ஆறி நிலாவும் நிலாவும் போல்
மன்றல் தரமணந்து வாழ்.

சற்குரு :

மாணவனே! மும்மலங்கள் என்ற துன்பத்தை, நீ நீங்கிய நிலையில் உணரும் இந்த பரமசுகத்தை (சுகப்பிரபையை) சிவாகமங்கள் இறைவனின் இன்பசக்தி என்று கூறுவதை அறிவாயாக. நீ இறைவனிடத்தில் பேரன்பு கொண்டு, அந்த பரமசுக உணர்வை அனுபவித்து, நிலாவும் நிலாவும் (இரு நிலவுகள்) ஒன்றோடு ஒன்று கலந்தது போல இன்பம் பெருகும் வண்ணம் அந்தப் பரம சுகத்தோடு ஒன்றாகக் கலந்து வாழ்வாயாக.

"பரசுகம்" என்பது இறைவனின் இன்ப சக்தியால் விளைவது ஆகும். இரு நிலவுகள் கலப்பது போல அந்தப் பரமசுகத்தைப் பொருந்தி அனுபவிப்பாயாக என்பது உட்பொருள் ஆகும்.

**பரமசுகமும் இறைவனின் ஒரு சக்தி உணர்வே எனல்**

56. தேன் ஆரும் இன்பச் சிவவடிவம் இப்படியோ
வானாடர் காணாத மன்னவனே - ஞானா
இதுவும் ஒரு சத்தி இறைவர்க்கு இது ஆனால்
ஏதுமுத்தி சொல்லாய் இனி.

மாணவன் :

தேவர்களும் காண்பதற்கு அரிய (கடினமான) பரமானந்தத்தை உணர்ந்த பரமாசிரியரே (மன்னவனே)! எம் ஞான ஆசிரியரே! பரம ஆனந்தமாகிய (பரமானந்தம் எனும்) தேன் நிறைந்து ததும்பும் "சிவவடிவம்" எத்தகைய தன்மை வாய்ந்தது? மற்றும் சுத்தாவத்தை நிலையில் நான் உணரும் பரம சுகத்தைப் போன்றதோ? அதனை உபதேசித்து அருள்வீராக.

சற்குரு :

இப்பொழுது உணரும் பரமசுகம் என்பது எல்லாம் வல்ல இறைவனது ஒரு சக்திநிலை (இன்ப சக்தியின்) உணர்வு ஆகும் என்பதை அறிவாயாக.

மாணவன் :

அடியேன் உணர்ந்த பரமசுகம் என்பது இறைவனுடைய ஒரு சக்தி என்றால் இனி நான் அடையவிருக்கும் முத்தி (முக்தி) என்பது எது? இதனை நீங்கள் உபதேசித்து அருள வேண்டும்.

## 22. சுகாதீதம்

(சுக ரூபத்தில் பொருந்தியிருக்கும் நிலையை நீக்குதல்)

**சுகாதீதம் இலக்கணம் கூறுதல்**

57. இந்தச் சுகத்தில் இனிநீ விழியாமல்
அந்த அறிவின் அயர்ந்ததுபோல் - தொந்தம் அறப்
போதாய் இதுவே சுகாதீதம் பொய் அற்றோர்க்கு
ஆதார மான அருள்

சற்குரு :

மாணவனே! இனி இந்தச் சுகரூபத்தினை (பரம சுகத்தை) உணர்ந்து அனுபவித்த பின்பு, இந்த சுகரூப உணர்வினை மீண்டும் எதிர்பார்க்காமல், அந்த பரைஞானத்தை விட்டு நீங்கிய தன்மையைப் போல, சுகரூப (பரமசுக) உணர்வு நிலையையும் விட்டு நீங்குக. சுக ரூப உணர்வு நிலையை விட்டு நீங்குவதே "சுகாதீதம்" ஆகும். பாசஞானம் மற்றும் பசு ஞானம் (அ) மும்மலங்களின் தொகுப்பு இவற்றால் ஏற்பட்ட பொய்மை (பொய் நிலை) நிலையிலிருந்து நீங்கிய முக்தர்களுக்கு, அடிப்படையான மற்றும் ஆதாரமான அருள்நிலையே "சுகாதீத்ம்" என்று உணர்வாயாக.

**சுகாதீதத்திற்கும் மேம்பட்ட நிலைக்கு செல்க எனல்**

58. ஒன்றும் சுகவடிவுக்கு உள்ளான தம்பிரான்
அன்றி ஒரு பொருளும் ஆகாதே - நின்று அழுந்திச்
சொல்லரிய இந்தச் சுகத்துக் அதீதமாய்
நில் அவன் தா னாமே நிலை.

சற்குரு :

எப்பொழுதும் (சதா நேரமும்) சுகரூபமான திருமேனியின் உள்ளே, பிரியாமல் எழுந்தருளியிருக்கும் (பொருந்தியிருக்கும்) சிவத்தைத் (தம்பிரானை) தவிர வேறு எந்த ஒரு பொருளும் நிலையானது அல்ல. சிவமே நிலையானது என்ற உணர்வை

அனுபவத்தில் உணர முடியுமே தவிர, இத்தகைய தன்மை உடையதென்று சொல்வதற்கு கடினமானது ஆகும். எனவே "சுகாதீதம்" என்ற உணர்வு நிலைக்கும் மேம்பட்ட "சிவோகம்" என்ற பாவனையில் சிவமாகும் உணர்வு நிலையில் பொருந்தி விளங்குவாயாக.

இதனைக் கீழ்கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம்.

பேரானந்தத்தையே (சுகவடிவையே) தனக்கு திருமேனியாகப் (உருவமாக (அ) வடிவமாக) பொருந்தி, அதற்குள் எழுந்தருளியிருக்கும் சிவமாகிய தம்பிரானைத் தவிர, வேறு எந்த ஒரு பொருளும் நிலையானது அல்ல என்ற உணர்வை உணர்ந்து, சொல்வதற்கு அரிதான (கடினமான) இவ்வுணர்வில் (இந்த உணர்வில்) பொருந்தி "சுகாதீதம்" என்ற உணர்வு நிலையையும் நீக்கி, "சிவமே நீ" என்ற உணர்வு நிலையில் பொருந்துவாயாக.

சுகாதீதம் என்ற உணர்வு நிலையை விட்டு நீங்கி, சிவமே நிலையானது என்ற உணர்வு நிலையை அடைந்து, "சிவமே அனைத்தும்" மற்றும் "சிவமே நீ" என்ற உணர்வு நிலையை அடைவாயாக என்பது உட்பொருள் ஆகும்.

## 23. சிவப்பேறு

(பரசிவத்தோடு என்றும் நீங்காமல் நிற்கும் நிலை)

**சிவப்பேறு இலக்கணம் கூறுதல்**

59. எல்லாங் கழன்ற இடமே சிவம்என்று
சொல் ஆடுவர் கழன்ற தூயோர்கள் – நல்லாய்கேள்
நின்றபடி தானே நிலையா நிலை அதனில்
நின்றுவிடு நேராக நீ.

சற்குரு :

நல்ல உணர்வு நிலையை அடைந்த நல்லவனே (நல்லாய்) கேட்பாயாக. மும்மலங்களையும் நீங்கி, பரை ஞானத்தையும் (திருவருளையும்) நீங்கிய உணர்வு நிலையே "சிவம்" (சிவப்பேறு) (எல்லாம் கழன்ற இடமே சிவம்) என்று சிவாகமங்கள் உபதேசிக்கின்றது. இதனையே ஞானிகளும் தூயோர்களும்

கூறுவார்கள் நீ இப்பொழுது இருக்கும் சுகாதீதம் கடந்த சிவோக (சிவப்பேறு) உணர்வு நிலையில் உறுதியாகப் பொருந்தி விளங்குவாயாகா.

சுகாதீதம் வரை இருந்த உணர்வு நிலையைக் கடந்த உணர்வு நிலையே சிவம் (சிவப்பேறு) ஆகும். ஆகவே "சிவம்" என்ற உணர்வு நிலையில் இரண்டறக் கலந்து விளங்குவாயாக என்பது உட்பொருள் ஆகும்.

**சிவப்பேறு உணர்வு நிலையைக் கூறுதல்**

60. வான் அகத்தில் வானும் மணத்தில் மணமும்போல்
ஆனசுகப் பேற்றில் அழுந்தி அது - தான் ஆகும்
ஆண்டகுரு நாதா அடியேன் பெருவாழ்வை
மீண்டுசொல உண்டோ விதி.

மாணவன் :

ஆகாயத்திலே ஆகாயமும் (வானத்தில் வானமும்) மணத்திலே மணமும் (வாசனையில் வாசனையும்) போல அபேதமாகக் கலந்த (இரண்டறக் கலந்த) சிவோகத்தின் (சிவப்பேற்றின்) காரணமாக ஏற்பட்ட சுகத்தில் (இன்பத்தில்) பொருந்தி "அந்தச் சிவமே நான்" என்ற உணர்வைப் பெற்ற அடியேனாகிய என்னுடைய பெருவாழ்வையும் அதன் சுகத்தையும், சிறியேனாகிய என்னிடமும் கருணை கொண்டு உணர்த்தி, என்னை ஆண்டருளிய சிவகுரு நாதா! சிவப்பேறு உணர்வை அனுபவத்தில் உணர்வது அன்றி, இந்த உணர்வு நிலையை வார்த்தைகளால் விவரித்துக் கூறுவதற்கு விதிகள் (பிரமாணங்கள்) எதுவும் இருக்கிறதோ? (இல்லை என்பது உட்பொருள் ஆகும்.)

இதனைக் கீழ்கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம்.

சிவப்பேறு இன்பத்தில் பொருந்திய உணர்வுக்கு வானத்தில் வானமும், வாசனையில் வாசனையும் பொருந்துவதை உதாரணமாகக் கூறலாம்.

சிவப்பேறு என்ற துரியாதீத நிலையைப் பற்றி மேலும் உபதேசிக்க வேண்டிய வேறுபிற உணர்வு நிலைகள் இருப்பின், அவற்றையும் அடியேனுக்கு உபதேசித்து அருள வேண்டும் என்று சீடன் தனது சற்குருவிடம் விண்ணப்பம் செய்கிறான்.

## சிவப்பேறு உணர்வு நிலையின் தன்மை கூறுதல்

61. நீயுஞ் சிவமுமாய் நின்றாயோ நின்றிலையோ
ஆயஅடி யேனோ அதிகாரம் – நாயகனே
ஒன்று அன்று இரண்டு அன்று இரண்டு ஒன்று தான் அன்று
நின்றதொரு தன்மை நிலை.

சற்குரு :

மாணவனே! நீயும் சிவமும் ஒன்றுபட்டு பொருந்தி (இரண்டறக் கலந்து) நிற்கின்றாயோ? அல்லது பொருந்தி நிற்கவில்லையோ? கூறுவாயாக.

மாணவன் :

என் குருநாதனே! சிவப்பேறு என்ற உணர்வு நிலையை ஆராய்ந்து கூறுவதற்கு உரிய அதிகாரம் என்னிடம் உள்ளதோ? (அதாவது சிவப்பேறு உணர்வு நிலையைப் பொருந்தி உணர்ந்தாலும் அடியேன் அதனை முழுமையாகப் (பரிபூரணமாக) பொருந்தி இருக்கிறேனோ? என்று கூறக்கூடிய தன்மை என்னிடம் உள்ளதோ என்பதை என்னால் உறுதியாகக் கூறமுடியவில்லை.)

மாணவன் :

இருப்பினும், நான் சிவத்தோடு இரண்டறக் கலந்து ஒரு தன்மையாக (சிவமாக) நின்ற நிலையானது 1.ஒன்று அன்று (சிவமும் நானும் ஒன்றான தன்மை அன்று (அல்ல)) 2.இரண்டன்று (சிவம் வேறு நான் வேறு என்ற) இரண்டு (இரட்டை) நிலையும் அன்று 3.இரண்டும் ஒன்று தான் அன்று (சிவமும், நானும் ஆகிய இரு பொருட்களும் ஒன்றாய்க் கலந்து நிற்கும் நிலையும் அன்று (அல்ல)

நான் உணர்ந்த சிவப்பேறு நிலையானது "சித்தாந்த சைவம்" கூறிய "சுத்தாத்துவித நிலை" (சுத்த அத்துவித நிலை) ஆகும். (அதாவது சிவமும் நானும் பொருந்தியிருப்பது ஒரு (ஒருமித்த) (அ) (ஒத்த) தன்மை நிலையாகும்.

சிவமே அனைத்துமாக இருப்பதாலும், சிவமே உயிர்களாக இருப்பதாலும், சிவப்பேறு என்ற உணர்வு நிலையானது "சிவமாகவே இருப்பதை உணரும் நிலையாகும்" என்பது உட்பொருளாகும்.

## தாடலை போன்றது சிவப்பேறு உணர்வு நிலை எனல்

62. சாற்றில் அதற்கு உவமை தாடலைப்போல் சன்மார்க்க
வேற்று விதிபலவும் வேண்டாவே - போற்றரிய
நித்தனே சுத்தனே நித்திய ஆனந்தனே
அத்தனே முத்தனே ஆங்கு.

மாணவன் :

நித்தனே (நித்தியப் பொருளே) சுத்தனே (மும்மலங்கள் நீங்கியவனே), நித்தியானந்தனே (நித்திய ஆனந்த சொரூபமானவனே) அத்தனே (உயிருக்கு உயிராய் இருக்கும் தலைவனே) என்று தனது குருவைச் சிவமாக உணர்ந்து மாணவன் அழைத்து,

சிவப்பேறு உணர்வை உவமையுடன் (உதாரணத்துடன்) விளக்கி கூற வேண்டுமென்றால் தாள் + தலை என்ற இரு சொற்களும் "தாடலை" என்று வேறுபாடின்றி ஒன்றாகப் பொருந்தி நிற்கும் தன்மை போன்றது ஆகும்.

ஆகவே, சன்மார்க்கத்தில் சொல்லப்பட்ட வேறுபல விதிகள் (பிரமாணங்கள்) சிவப்பேறு உணர்வை விளக்கிக் கூறுவதற்குத் தேவைப் படுவதில்லை.

"தாடலை" போன்றது என்று சித்தாந்த சைவம் (சைவ சித்தாந்தம்) கூறும் "சுத்த அத்துவித முக்தி நிலையே" தனது சிவப்பேறு உணர்வு நிலையாகும் என்று மாணவன் தனது குருவிடம் கூறுகிறான்.

## சிவப்பேறு நிலையைப் பெற்றும் அறியாமையுடன் மீண்டும் பொருந்துபவர் பற்றிக் கூறுதல்

63. அந்தச் சுகத்துக்கு அதீத அவத்தை என்பர்
பந்தம் ஆற்ற முத்திப் பயன் அறியார் - அந்தோ
பிறியாத இன்பப் பெருமானைப் பெற்றும்
அறியாத வாதனையால் ஆங்கு.

சற்குரு :

என்றும் உயிர்களை விட்டுப் பிரியாத ஆனந்த (இன்ப) சொரூபமான இறைவனோடு "தாடலை போல்" பொருந்தி இருந்தும், அறியாமையோடு கூடி நின்ற பழக்கத்தால், சிவப்பேறு உணர்வு

நிலையில் மும்மலங்களின் தொடர்பு (பந்தம்) அற்ற (நீங்கிய) பரமுத்தியின் (பரமுக்தியின்) பயன்களை அறிய மாட்டார்கள். சிவப்பேறு உணர்வு நிலையில் "தாடலைபோல்" பொருந்தி இருக்கும் சுகத்திற்கு (இன்பத்திற்கு) "அதீத அவத்தை" என்று பெயரிட்டு கூறுவார்கள்.

ஆகவே சிவப்பேறு உணர்வு நிலையை "ஆதீத அவத்தை" என்று கூறுபவர்களும், பரமுத்தியின் பயன்களை அறியாதவர்களும் அறியாமை உடையவர்கள் ஆவார்.

மும்மலங்களோடு கூடி அறியாமையில் இருப்பவர்களும், சிவப்பேறு நிலையை உணர்ந்த பின்பும் அறியாமையுடன் கூடிய பழக்க வாசனையால் "சிவப்பேறு உணர்வு நிலையை" அதீத அவத்தை என்று கூறுபவர்களும் பரமுக்தியின் பயன்களை அறிய மாட்டார்கள் என்பது உட்பொருள் ஆகும்.

இப்பாடலைக் கீழ்கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம். சிவப்பேறு உணர்வு நிலையை அடையும் பொழுது ஏற்படும் சுகத்தை "அதீத அவத்தை" என்று மும்மலங்கள் நீங்கிய முக்திப் பதத்தின் பயனை அறியாதவர்கள் கூறுவர்.

மேலும் சிவபேறு உணர்வு நிலையை பெற்றும், முன்பு அறியாமையுடன் கூடி இருந்த பழக்க வாசனையால் சிவப்பேறு உணர்வை உணராமல் அதனை அதீத அவத்தை என்று கூறுவார்கள். இத்தகையோர் முக்திப் பயன்களை அறியாத பரிதாபத்திற்கு உரியவர்கள் ஆவார்.

## 24. பரமானந்த தரிசனம்

(பரபோகமாகிய பரமானந்தத்தை உணருதல்)

### சிவத்திற்கு இதம் எதுவென்று கூறுதல்

64. நின்ற நிலை சிவமாய் நின்றாயே நின்மலனும்
என்றும் பயனாய் இருந்தானே – அன்றே
அவனுக்கு இதம் ஏது அவனாகி நின்ற
இவனுக்கு இதம் ஏது இனி.

சற்குரு :

மகனே (மாணவனே)! நீ நிற்கின்ற (உணரும்) இந்தச் சிவப்பேறு உணர்வு நிலையானது "சிவமாக நிற்கும்" (இருக்கும்) நிலையாகும். நின்மலனாகிய சிவமும், "நீ என்றும் (எப்பொழுதும்) அனுபவிப்பதற்குரிய (உணர்வதற்கு உரிய) இன்பப் பொருளாய்" (பயனாய்) இருக்கின்றான். இவ்வண்ணம் உயிர்களுக்கு இன்பப் பொருளாக இருப்பதே சிவத்திற்கு இதமானது ஆகும்.

மாணவன் :

அந்தச் சிவமாகி நின்ற எனக்கு இனி நிகழும் (ஏற்படவிருக்கும்) இதம் (அனுபவம்) எது? என்று என் சற்குருவே உபதேசித்து அருள்வீராக.

இப்பாடலைக் கீழ்கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம்.

சிவபேறு உணர்வு நிலையில் உயிரானது சிவமாய் இருக்கும். சிவப்பேறு உணர்வு நிலையில் சிவமாய் இருக்கும் உயிருக்கே இன்பம் ஏற்படும். ஆனால் சிவத்திற்கு ஒரு வித இன்பமும் ஏற்படுவது இல்லை. (ஏனெனில் சிவமானது இன்ப துன்பங்களைக் கடந்த நின்மலன் (மும்மலம் அற்றவன்) ஆவான்) ஆகவே உயிரானது சிவப்பேறு உணர்வு நிலையை அடையச் சிவமே திருவருள் புரிந்தது.

**இறைவனுக்கு உரிய இதம் பற்றி**

**ஆகமங்கள் உபதேசிப்பதைக் கூறுதல்**

65. அன்றே தொடங்கி அனைத்து உயிரும் தான் ஆகி
ஒன்றாகி நின்று அவருக்கு இன்பு ஊட்டிக் - குன்றாமற்
கொண்டுவிடல் அன்றோநம் கோமாற்கு இதம்என்று
கண்டுகொள் நீ இந்தக் கருத்து.

சற்குரு :

இறைவனானவன் உயிர்களைத் தோற்றுவித்த காலத்தில் இருந்தே (சிருட்டி காலத்தில் இருந்தே) அனைத்து உயிர்களும் தானாகி, ஏகமாய் நின்று, அந்த உயிர்கள் பரிபூரணமான சுகத்தை (இன்பத்தை) அனுபவிக்குமாறு செய்து, தன் திருவடி நிழலில் பொருந்துமாறு செய்வதே நம்முடைய இறைவனாகிய சிவத்திற்கு இதமானது என்று, இறைவன் அருளிய சிவாகமங்கள் கருணையுடன் (பரிவுடன்) உபதேசிக்கும்.

## உயிர்கள் பரம சுகத்தை அனுபவிக்குமாறு இறைவன் அருள் புரிவான் எனல்

66. பார்க்க அரிய இந்தப் பரம சுகம் தன்னை
சோப்பன் உயிர்க்கு என்று இறைவா செப்பினையே - மாற்றரிய
ஆனந்தம் ஆருயிர்கட்கு அண்ணல் அருத்துவது
தான் எங்குப் பெற்றவாறு சாற்று.

மாணவன் :

இத்தகைய தன்மை உடையது என்று யாராலும் அறிந்து சொல்வதற்குக் கடினமான இந்தப் பேரின்பத்தை (பரம சுகத்தை), உயிர்கள் அனுபவிக்குமாறு இறைவன் அருள்புரிவான் என்று சிவகுருவாகிய தாங்கள் எனக்கு உபதேசித்து அருளினீர்கள்.

எவ்விதத்தில் ஆவது (எவ்வாறாவது) நித்தியமாகிய பேரின்பத்தை உயிர்கள் அனுபவிக்குமாறு அருள் புரிவது இறைவனுக்கு இதம் என்றால் அந்தப் பரம சுகத்தை (பேரின்பத்தை) இறைவன் எங்கிருந்துப் பெற்றான் என்பதை அடியேனுக்கு உபதேசித்து அருள வேண்டும்.

## 67. இறை உருவம் ஆனந்தம் எனல்

67. பெற்று அருந்தி இன்பம் பிறர்க்கும் அருத்தினனோ
உற்றபர மானந்தம் உள்ளதோ - மற்றுஇது தான்
என்று நீ கேட்கில் இறையுருவம் ஆனந்தம்
அன்றிவேறு ஒன்றில்லை ஆம்.

சற்குரு :

இந்தப் பேரின்பத்தை, இறைவன் வேறு ஒரு இடத்தில் இருந்து பெற்று, அந்த பேரின்பத்தைத் "தான்" அனுபவித்த பின்பு, உயிர்களுக்கு அந்த பேரின்பத்தை அனுபவிக்குமாறு செய்தாரோ?

இறைவனிடம் உள்ள அந்தப் பரமானந்தம் (பேரின்பம்) இயல்பாக அவருக்கு அமைந்துள்ளதோ? என்று மாணவனே நீ கேட்ட கேள்விக்கு பதில் என்னவென்றால்?

"இறைவன் உருவம் ஆனந்தம்" [(இறைவனது திருமேனியே (திருஉருவமே) பேரானந்த வடிவம் (சொரூபம்)] ஆகும்.

பரமானந்தம் (பேரின்பம் (அ) பரமசுகம்) என்பது இறைவனின் சொரூபமே அன்றி ஆனந்தம் (பரமானந்தம்) என்று கூறப்படும் பொருள் வேறு ஒன்றும் இல்லை. இதனையே சிவாகமங்களும் உபதேசிக்கின்றது என்பதை மாணவனே அறிவாயாக.

**சீவன் சிவமாகும் பொழுது தோன்றுவதே பரமசுகம் எனல்**

68. ஆனபர மானந்தம் ஆகின்ற எல்லையே
ஊனம்இலா உண்மைதனில் ஒன்றுபடல் – ஈனம் அறத்
தான் ஆன போது தணவாது எழுந்த சுகம்
மானே அதுவா மதி

சற்குரு :

பரமானந்தம் என்று கூறப்படும் நிலை (பரமானந்தத்தின் எல்லை என்று கூறப்படும் நிலை) என்பது குற்றங்கள் மற்றும் குறைகள் எதுவும் இல்லாத (ஊனமில்லாத) மெய்பொருளாகிய பரசிவத்தோடு (பரம்பொருளோடு) ஒன்றுபடுதல் ஆகும்.

உயிர்களானது குற்றங்கள் (மும்மலங்கள்) நீங்கி, அந்தச் சிவமாகவே ஆகும் பொழுது, தானாகவே (தன் இயல்பாகவே) என்றும் நீங்காமல் எழுவது (உண்டாவது) "பரமசுகம்" என்பதை மாணவனே அறிவாயாக.

அடைவதற்கு அரிதான (கடினமாக) இந்தப் பெருநிலையை அடைந்தவனே "ஞானி" என்று அழைக்கப் படுவான். ஆகவே அத்தகைய பெருமை வாய்ந்தது அந்த பரமானந்த சுகம் என்பதையும் என்மகனே! அறிவாயாக.

## 25. பரமானந்த யோகம்

(பரமானந்தத்துடன் பொருந்துதல் மற்றும் சிவமாக விளங்குதல்)

**பரமானந்தத்தின் இயல்பு கூறுதல்**

69. விளைந்தபர மானந்த வெள்ளந் தனிலே
துளைந்து துளைந்து ஆடி அதில் தோன்றா – வளைந்து உன்னை
நீர்போல் அமிழ்த்தி அதன் நீள்நிழல்போல் தான்கரந்து
பார்போல் பரிப்பாகும் பார்.

சற்குரு :

நீ சிவப்பேறு (சிவோக நிலை) உணர்வதால் ஏற்பட்ட (தோன்றிய) "பரமானந்தம்" என்ற வெள்ளத்தில் நன்கு மூழ்கி, அந்தப் பரமானந்தத்தில் "நீ" தோன்றாத வண்ணம் (உன் அறிவானது தோன்றாவாறு) உன்னைச் சூழ்ந்து, நீர் (தண்ணீர்) போல உன்னை அமிழ்த்தி (மூழ்கடித்து) அந்த நீரினது நிழல் ஆனது பிறர் கண்களுக்கு புலப்படாதது (காட்சியாகாதது) போல, உன்னை மறைத்து, நிலம் போல உன்னை எப்பொழுதும் தன்னிடத்தில் வைத்துக் கொள்ளும். என்பதை உணர்வாயாக.

சிவப்பேறு உணர்வு நிலையை உயிரானது உணரும் பொழுது உருவாகும் பரமானந்தமானது, அவ்வுயிரை பேரின்பத்தில் மூழ்கடித்து, அவ்வுயிரின் அறிவு செயல் படாதவாறு தன்னிடத்தில் வைத்துக் கொள்ளும் என்பது உட்பொருள் ஆகும்.

**பரமசுகத்தில் அபாவமாய் சிவமாய் விளங்குக எனல்**

70. பாராதே அந்தப் பரம சுகம் தன்னை
நேராகத் தாணு நிழல்போலத் – தீராச்
சுபாவம் அதுவாகத் தோன்றி மறை யாதே
அபாவமாய் நில்லாய் அதில்

சற்குரு :

மாணவனே! நீ உணர்ந்த பரமசுத்தை (பரமானந்தத்தை) பொருந்தி (கூடி) நின்றாலும், அந்தப் பரமானந்தத்தை ஒரு பொருட்டாய் எண்ணாமல் (பரமசுகத்தில் மூழ்கினாலும் அதில் கரைந்து விடாமல் அந்த பரமசுகத்தில் இருந்து கொண்டு) இறைவன் (அ) தாணு (அ) சிவம் என்றும் ஓர் இயல்பாய் இருக்கும் நிலைபோல, நீயும் அந்தத் தன்மை உடையவனாய், அந்த இறை தன்மையில் (சிவத் தன்மையில்) இருந்து நீங்காமல் அந்த தாணுவின் (சிவத்தின்) தன்மை உடையவன் ஆக வேண்டும்.

பரமானந்தமானது தோன்றினால் மறையாது (நீங்காது). அதுவே அந்தப் பரமசுகத்தில் அபாவமாய் [பரம சுகத்தில் விளங்கினாலும் (பொருந்தி இருந்தாலும்) அதனை ஒரு பொருட்டாக எண்ணாமல் (அந்த பரமானந்தத்தில் மூழ்கிக் கரைந்து விடாமல்)] 'நீ" அதுவாய் (சிவமாய்) நிற்பாயாக (விளங்குவாயாக).

பரம சுகம் தோன்றினால் மறையாது என்பதால், அந்தப் பரமசுகத்தில் இருந்து கொண்டு, சிவமாய் விளங்க வேண்டும் என்பது உட்பொருள் ஆகும்.

சுத்தாவத்தை, சுகரூபம், சுகாதீதம், சிவப்பேறு, பரமானந்த தரிசனம், பரமானந்தயோகம் ஆகிய இந்த ஆறு உணர்வு நிலைகளும், "துரிஃபம்" என்று கூறப்படும். இதுவே தசகாரியங்களுள் "சிவயோகம்" என்று கூறப்படும். இந்த நிலையை அடைந்தவர்கள் மீண்டும் பிறவி எடுக்க மாட்டார்கள். (பிறவா வரம் பெறுவார்கள்).

## 26. பரமானந்த போகம்

(பரமானந்த அனுபவம்)

**பரமானந்த போகத்தை அனுபவிக்கும் விதம் கூறுதல்**

71. நின்றபர மானந்தம் நேரே அனுபவித்து அங்கு
ஒன்றுபட உள் உருகி ஒவாமல் – என்றும்
மதுஉண்ட வண்டுபோல் மாளாச் சுகத்தைப்
புதிதுஉண்டு இருந்துவிடு இப்போது.

சற்குரு :

மாணவனே! நீ பொருந்தி (கூடி) இருக்கும் பரமானந்தத்தை நேரிடையாக (நேராக) அனுபவித்து, அந்தப் பரமானந்தத்தில் நன்கு பொருந்தி, உனது உள்ளம் உருகி, தேனைப் பருகிய வண்டு அந்தத் தேனின் சுகத்தை அனுபவிப்பது போல உன்னை விட்டு நீங்காத அந்தப் பரமானந்தத்தை இடைவெளி இல்லாமல் புதிது புதிதாக அனுபவித்து, பரமானந்த போக (பரமசுக) நிலையில் நீ இருப்பாயாக.

தேனைப்பருகிய வண்டு, தேன் தரும் மயக்கத்தால் தான் பருகிய தேனையும் உணராமல், அந்தத் தேன் தந்த இன்ப சுகத்தில் இருப்பது போல பரமானந்த சுகத்தில் இருக்க வேண்டும்.

சிவப்பேறு (சிவமாகும்) நிலையை அடைந்தவர்களுக்கு, தெவிட்டாத பரமானந்தத்தை அனுபவிக்குமாறு, புதிது புதிதாகிய (புதுப்புது) இன்பத்தை, சிவப்பேறு உணர்வு நிலையானது கொடுத்து அருளும் என்பது உட்பொருள் ஆகும்.

**பரமசுகத்தை இறைவன் அனுபவிக்க மாட்டான் எனல்**

72. பருகத் தொலையாய் பரபோகம் தன்னை
உருகி அடி யேன்அருந்த ஊட்டும் - குருவே
அழியாத இன்பம் அரன் அருந்தான் என்னும்
வழி ஏது சொல்வீர் மகிழ்ந்து.

மாணவன் :

அனுபவித்துக் கொண்டே இருந்தாலும் திகட்டாத பரபோகத்தை (பரமானந்தத்தை) தங்களின் அடியேனாகிய (அடிமையாகிய) நான் உள்ளம் உருகி அனுபவிக்குமாறு பெருங்கருணையுடன் திருவருள் அருளிய (புரிந்து) சற்குருநாதா!

என்றும் அழியாத பரமானந்தத்தை உயிர்களானது அனுபவிக்குமாறு மற்றும் உயிர்களுடைய மும்மலங்களை நீக்கித் தன்னுடன் பொருந்துமாறு அருளும் இறைவன், அந்தப் பரமானந்தத்தை அனுபவிக்க மாட்டான் என்று தாங்கள் கூறுவதன் உட்பொருள் என்ன? என்பதைத் தாங்கள் கருணை கூர்ந்து உபதேசித்து அருள வேண்டும் (என மாணவன் கேள்வி எழுப்புகிறான்)

**இறைவனுக்கு பரமானந்தமே சொரூபம் எனல்**

73. சர்க்கரைதான் ஆர்க்கும் தரும்இரதம் அவ்விரதம்
சர்க்கரை தான் கொள்ளுமோ சாற்றுங்கால் - சர்க்கரை
இன்புருவம் அன்றி எழில்உருவம் வேறுஉண்டோ
இன்புஉருவ மேஇறைக்கு என்.

சற்குரு :

சர்க்கரையானது அனைவருக்கும் இனிமையைக் (இனிப்புச் சுவையைக்) கொடுக்கும். அந்த இனிமையைச் சர்க்கரையானது அனுபவிக்குமோ? - அனுபவிக்காது.

நன்கு ஆராய்ந்து கூறும் பொழுது, சர்க்கரைக்கு இனிமையே சொரூபம் ஆகும். இந்த இனிமையை உடைய சொரூபம் அன்றி அதனினும் சிறந்த அழகிய சொரூபம் வேறு உண்டோ? - இல்லை.

அது போல இறைவனுக்கும் இன்பமே (பரமானந்தமே) சொரூபம் என்பதை உணர்ந்து கூறுவாயாக.

பரம சுகம் தோன்றினால் மறையாது என்பதால், அந்தப் பரமசுகத்தில் இருந்து கொண்டு, சிவமாய் விளங்க வேண்டும் என்பது உட்பொருள் ஆகும்.

சுத்தாவத்தை, சுகரூபம், சுகாதீதம், சிவப்பேறு, பரமானந்த தரிசனம், பரமானந்தயோகம் ஆகிய இந்த ஆறு உணர்வு நிலைகளும், "துரி:பம்" என்று கூறப்படும். இதுவே தசகாரியங்களுள் "சிவயோகம்" என்று கூறப்படும். இந்த நிலையை அடைந்தவர்கள் மீண்டும் பிறவி எடுக்க மாட்டார்கள். (பிறவா வரம் பெறுவார்கள்).

## 26. பரமானந்த போகம்

(பரமானந்த அனுபவம்)

### பரமானந்த போகத்தை அனுபவிக்கும் விதம் கூறுதல்

71. நின்றபர மானந்தம் நேரே அனுபவித்து அங்கு
ஒன்றுபட உள் உருகி ஓவாமல் – என்றும்
மதுஉண்ட வண்டுபோல் மாளாச் சுகத்தைப்
புதிதுஉண்டு இருந்துவிடு இப்போது.

சற்குரு :

மாணவனே! நீ பொருந்தி (சூழ்) இருக்கும் பரமானந்தத்தை நேரிடையாக (நேராக) அனுபவித்து, அந்தப் பரமானந்தத்தில் நன்கு பொருந்தி, உனது உள்ளம் உருகி, தேனைப் பருகிய வண்டு அந்தத் தேனின் சுகத்தை அனுபவிப்பது போல உன்னை விட்டு நீங்காத அந்தப் பரமானந்தத்தை இடைவெளி இல்லாமல் புதிது புதிதாக அனுபவித்து, பரமானந்த போக (பரமசுக) நிலையில் நீ இருப்பாயாக.

தேனைப்பருகிய வண்டு, தேன் தரும் மயக்கத்தால் தான் பருகிய தேனையும் உணராமல், அந்தத் தேன் தந்த இன்ப சுகத்தில் இருப்பது போல பரமானந்த சுகத்தில் இருக்க வேண்டும்.

சிவப்பேறு (சிவமாகும்) நிலையை அடைந்தவர்களுக்கு, தெவிட்டாத பரமானந்தத்தை அனுபவிக்குமாறு, புதிது புதிதாகிய (புதுப்புது) இன்பத்தை, சிவப்பேறு உணர்வு நிலையானது கொடுத்து அருளும் என்பது உட்பொருள் ஆகும்.

**பரமசுகத்தை இறைவன் அனுபவிக்க மாட்டான் எனல்**

72. பருகத் தொலையாய் பரபோகம் தன்னை
உருகி அடி யேன்அருந்த ஊட்டும் – குருவே
அழியாத இன்பம் அரன் அருந்தான் என்னும்
வழி ஏது சொல்வீர் மகிழ்ந்து.

மாணவன் :

அனுபவித்துக் கொண்டே இருந்தாலும் திகட்டாத பரபோகத்தை (பரமானந்தத்தை) தங்களின் அடியேனாகிய (அடிமையாகிய) நான் உள்ளம் உருகி அனுபவிக்குமாறு பெருங்கருணையுடன் திருவருள் அருளிய (புரிந்த) சற்குருநாதா!

என்றும் அழியாத பரமானந்தத்தை உயிர்களானது அனுபவிக்குமாறு மற்றும் உயிர்களுடைய மும்மலங்களை நீக்கித் தன்னுடன் பொருந்துமாறு அருளும் இறைவன், அந்தப் பரமானந்தத்தை அனுபவிக்க மாட்டான் என்று தாங்கள் கூறுவதன் உட்பொருள் என்ன? என்பதைத் தாங்கள் கருணை கூர்ந்து உபதேசித்து அருள வேண்டும் (என மாணவன் கேள்வி எழுப்புகிறான்)

**இறைவனுக்கு பரமானந்தமே சொரூபம் எனல்**

73. சர்க்கரைதான் ஆர்க்கும் தரும்இரதம் அவ்விரதம்
சர்க்கரை தான் கொள்ளுமோ சாற்றுங்கால் – சர்க்கரை
இன்புருவம் அன்றி எழில்உருவம் வேறுஉண்டோ
இன்புஉருவ மேஇறைக்கு என்.

சற்குரு :

சர்க்கரையானது அனைவருக்கும் இனிமையைக் (இனிப்புச் சுவையைக்) கொடுக்கும். அந்த இனிமையைச் சர்க்கரையானது அனுபவிக்குமோ? – அனுபவிக்காது.

நன்கு ஆராய்ந்து கூறும் பொழுது, சர்க்கரைக்கு இனிமையே சொரூபம் ஆகும். இந்த இனிமையை உடைய சொரூபம் அன்றி அதனினும் சிறந்த அழகிய சொரூபம் வேறு உண்டோ? – இல்லை.

அது போல இறைவனுக்கும் இன்பமே (பரமானந்தமே) சொரூபம் என்பதை உணர்ந்து கூறுவாயாக.

## இறைவன் பரம சுகத்தை அனுபவிக்காமல் இருப்பதற்கு காரணம் கூறுதல்

74. நாஆர் இரதமது நாஅருந்தல் அல்லாது இங்கு
ஓவா இரதம் அறியுமோ – ஓவாப்
பரமசுகம் உன்பால் பவிப்பதே அன்றிப்
பரமசுகம் கொள்ளா பயன்.

சற்குரு :

நாக்கு (நா) என்பது உணவுப் பொருளின் சுவையை உணர்ந்து அனுபவிக்கும். ஆனால் உணவுப் பொருளானது தனது சுவையைத் தானே அனுபவிக்காது அதுபோல (நா' போல) என்றும் நீங்காத பரமசுகத்தை (பரமானந்தத்தை) உடைய சொரூபத்தை, நீ உணர்ந்து அனுபவிப்பது ஆகும். ஆனால் பரமசுக சொரூபமான இறைவன் அந்தப் பரமசுகத்தை அனுபவிக்க மாட்டான்.

சர்க்கரையானது தன்னை உண்பவர்களுக்கு மட்டுமே இனிய சுவையைத் தரும். ஆனால் சர்க்கரையானது தனது இனிய சுவையை அனுபவிக்காது (அறியாது).

நாவானது உணவின் சுவையை அறியும். ஆனால் உணவானது தன் சுவையை அறியாது.

அதுபோல பரமானந்தம் என்பது தன்னை உணர்பவர்களை ஆனந்தம் அடையச் செய்யும். ஆனால் தனது நிலைக்களமான இறைவனை ஆனந்தம் அடையச் செய்யாது. (அ) பரமானந்த சொரூபமான இறைவனை உணரும் உயிர்களே பரமானந்தத்தை அனுபவிக்கும். ஆனால் பரமானந்த சொரூபமான இறைவன் தனக்கு தானே பரமானந்தத்தை அனுபவிக்க மாட்டான் என்பது உட்பொருள் ஆகும்.

## பரமசுகம் ஆன்மலாபம் எனல்

75. இந்தச் சுகம் ஆன்ம லாப ம்என அறிநீ
அந்தச் சுகம் ஒழிந்து இங்கு ஆராதே – இந்தச்
சுகம்எலாம் அந்தச் சுகம் ஆக்கில் உன்தன்
அகம்எலாம் ஆனந்த மாம்

சற்குரு :

மாணவனே! இந்தப் "பரமானந்த போகம்" (பரமசுகம், பரமானந்த சுகம்) என்பது "ஆன்ம லாபம்" என நீ அறிய வேண்டும்.

இந்த ஆன்மலாபம் என்ற பரமசுகத்தை இந்நிலையில் (சிவபேறு உணர்வு நிலையில்) உணர்ந்தபின் (அனுபவித்தபின்), அந்தப் பரம சுகத்தையும் நீக்கி, இந்தப் பரமானந்த சுகமானது அந்த பரமானந்தச் சொரூபத்தை உடைய இறைவனுடையது என்று உணர்ந்து, அந்த இறைவனின் திருவடிகளில் பொருந்தினால் (பரசிவத்தோடு பொருந்தினால்), உன் தேகம் (உடல்) எல்லாம் "ஆனந்தவடிவம்" ஆகும்.

இப்பாடலை மேலும் விளக்கிக் கூறலாம்.

"சிவப்பேறு உணர்வு நிலையில்" பெறும் பரமானந்த இன்பமே (பரமசுகமே) உயிர்களுக்கு உறுதியான ஆன்மலாபம் ஆகும். ஆகவே பரமசுகத்தைத் தவிர வேறு பிற (மற்ற) இன்பங்கள் பரமசுகம் போல் தோன்றினாலும் அவற்றை அனுபவிக்காமல், இந்த உலகத்தில் "நீ" (உயிர்கள்) இன்பம் என நினைக்கும் அனைத்தையும் நீக்கி, பரமசுகத்தை மட்டும் உணர்ந்து அனுபவிக்க வேண்டும். பின் அந்தப் பரமசுகமானது இறைவனது சொரூபமே என்பதையும் உணர்ந்து, அந்தப் பரம சுகத்தையும் நீக்கி, இறைவனோடு இரண்டறக் கலக்கும் உணர்வைப் பொருந்த (கூட) முடியும் என்றால் உன்னுடைய (உயிர்களுடைய) தேகம் எல்லாம் ஆனந்த சொரூபம் பெறும்.

## 27. பரமானந்த மேலீடு

(பரமானந்தம் அதிகரித்து அனைத்தையும் ஆனந்தச் சொரூபமாக காணுதல்)

### அனைத்தும் ஆனந்த சொரூபம் எனல்

76. அண்ணலும்ஆ னந்தம் அருளும்ஆ னந்தம் உயிர்
எண்ணிலா ஆனந்தம் எவ்வுலகும் - பண்ணி
அளித்து அழிப்பார் ஆகும் அவர்களும்ஆ னந்தம்
களித்துஅதுவே எப்போதும் காண்.

சற்குரு :

மாணவனே! அனைத்திற்கும் தலைவனான இறைவனும் ஆனந்த வடிவம் (சொரூபம்). அந்த இறைவனின் திருவருளும் (சக்தியும்) ஆனந்த வடிவம். அனைத்து உயிர்களும் ஆனந்த வடிவம். அனைத்து உலகங்களையும் "படைத்து, காத்து, அழித்து" அருள் புரியும் மும்மூர்த்திகளாகிய "அயன் (பிரமன்), அரி (திருமால்),

அரன் (உருத்திரன்)" ஆகிய மூவரும் ஆனந்த வடிவம். ஆகவே அனைத்தும் ஆனந்த வடிவமாக இருப்பதை நீயும் ஆனந்த வடிவமாக இருந்து உணர்வாயாக.

பரம ஆனந்த சொரூபம் உடைய இறைவனும், இறைவனது சொரூபங்களும் (சக்திகளும்) உயிர்களைப் பக்குவப்படுத்தி பரமுக்தி அடையச் செய்வதை உணர்ந்து, பரமானந்தத்தை அனுபவித்தாலும், அந்த பரமானந்தத்தையும் இறைவனுடையதே என்பதையும் உணர்ந்து, அனைத்தையும் பரமானந்த சொரூபமாக உணர்ந்து, மேம்பட்ட பதநிலைக்குச் செல்ல வேண்டும் என்பது உட்பொருள் ஆகும்.

இறைவனும், இறை சக்தியும், உயிர்களும், உலகங்களும், முத்தொழில் இயற்றும் மும்மூர்த்திகளும் ஆனந்த வடிவமாக இருப்பதை உணருவதே "பரமானந்த மேலீடு" ஆகும். இதனை உணர்வாயாக!

**பரமானந்த மேலீடின் இயல்பு கூறுதல்**

77. எங்கு நிறைந்த ஆனந்தம் எல்லாம் அமிழ்த்திமிகப்
பொங்கிக் கரைபுரண்டு பூரணமாய் - எங்கும்
வளைத்த உலகுஉயிரும் வாய்த்த சுகமாம்
அளத்தில் புகுந்து அதுபோல் ஆங்கு.

சற்குரு :

மாணவனே! இத்தகைய தன்மை (இயல்பு) உடைய பரமானந்தம் என்பது உலகம் (பிரபஞ்சம்) அனைத்தும் நிறைந்து, அதில் உள்ள அனைத்து பொருட்களையும் மூடி (மூழ்கச் செய்து) அந்தப் பரமானந்தமானது வெள்ளம் போல மிகவும் பெருக்கெடுத்து வரம்புகளைத் (எல்லைகளை) தகர்த்தெறிந்து (உடைத்து), எங்கும் குறைவில்லாமல் நிறைந்து (பூரணமாய்), அந்தப் பூரண நிலையில் பரமானந்தத்தால் நிறைந்த (சூழ்ந்து மூடப்பட்ட) உலகமும் (பிரபஞ்சமும்) உயிர்களும், உன்னுடைய "பரமானந்த மேலீடு" என்ற இந்த உணர்வு நிலையில், நீ உணருமாறு வாய்த்த ஆனந்த வடிவம் (ஆனந்த சொரூபம் (அ) சுகவடிவம்) ஆகும். இந்த உணர்வு நிலையானது எது போல (எவ்வாறு இருக்கும்) என்றால் உப்பளத்தில் சேர்ந்த பொருட்கள் தமது வடிவத்தை இழந்து அந்த உப்பாக மாறியது போல ஆகும். இதனை நன்கு உணருவாயாக.

பரமானந்தமானது அனைத்திலும் பூரணமாய் நிறைந்து, அனைத்தும் பரமானந்தத்தில் ஒடுங்கியது போன்ற உணர்வை "பரமானந்த மேலீடு" என்ற நிலையில் உணருவாயாக என்பது உட்பொருள் ஆகும்.

**பரமுக்தியை சற்குருவின் திருவடிகள் அருளும் எனல்**

78. கண்ட இடமெல்லாம் கருணைக் கடல் அமுதம்
மொண்டுகொளல் ஆய்நிறைந்த முத்திதனைப் - பண்டே
திருமால் அயன் அறியாத் தேசிகனார் பாதம்
தருமாம் அடியேற்குத் தான்.

மாணவன் :

பார்க்கும் இடம் எல்லாம் (காணும் காட்சிகள் அனைத்தும்), இறைவனது கருணை என்னும் கடலில் தோன்றிய பரமானந்தம் என்ற அமுதத்தை அனுபவித்துக் கொள்ளுமாறு நிறைந்து இருக்கின்ற "பரமுக்தியை" (பரமுக்தியை), அன்று திருமாலும் பிரம்மாவும் தேடியும் காணமுடியாத இறைவனைப் போன்ற எமது சற்குருநாதரின் (தேசிகர்) திருப்பாதங்கள் (திருவடிகள்) எமது சற்குருவின் அடிமையாகிய (அடியேனாகிய) பழுத்த நாயினும் கடையேன் ஆகிய எமக்குத் தந்து அருளியது.

மாணவன் தனது சற்குருவை பரமானந்த மேலீட்டினால் அந்த இறைவனின் பரமானந்த சொரூபமாக உணர்ந்து பரமுத்தியை அடையும் நெறியை உபதேசிக்குமாறு வணங்குகின்றான்.

## 28. பரமானந்தவவசம்

(பரமானந்த அவசம்)

(பரமானந்தத்தில் தன் செயல் நீங்கி பரசிவமாய் (அதுவாய்)

அடங்கி (ஒடுங்கி) நிற்கும் நிலை கூறுதல்

**பரமானந்த சொரூபத்தை உடைய**

**இறைவனாகப் பொருந்துக எனல்**

79. பரமபர மானந்தம் பார்கீழ்மேல் மற்றும்
அரவம்வா ராதே அகலும் - பூரணமாய்
ஆங்கே அமிழ்ந்தி அவசமாம் ஆனந்தம்
நீங்காது அதுவாகி நில்.

சற்குரு :

மாணவனே! இறைவனது பெருங்கருணையாகிய "பரம பரமானந்தமானது" (பரமானந்த மேலீடுக்கும் மேம்பட்ட உணர்வு நிலையானது) நிலம், (பார்), பாதாளம் (கீழ்), ஆகாயம் (மேல்) என பிரபஞ்சம் முழுவதும் ஆரவாரமின்றி நிறைந்திருக்கும். "நீ" அந்த உணர்வு நிலையில் பொருந்தி, அந்த உணர்வு நிலையில் மூழ்கி, நீ பொருந்தி இருக்கும் ஆனந்தத்தை விட்டு நீங்காமல, அந்த ஆனந்தமாக விளங்குவாயாக. (அதுவாகி நில்). இதுவே பரமுக்தியின் முடிவு ஆகும்.

இப்பாடலைக்கீழ்கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம்.

பரம பரமானந்தமானது பிரபஞ்சம் முதல் அனைத்திலும் (எங்கும்) நிறைந்திருந்து, பின்னர் மெதுவாக அகன்று, ஓரிடத்தில் ஆரவாரமின்றிக் குவியும் (ஒடுங்கும்) இடமே பரமுக்திக்குரிய நிலையாகும். அதுவே பரசிவமாகும். அந்த பரமுக்திக்கு உரிய இடத்தில் (நிலையில்) பரிபூரணமாக ஒடுங்கி, பரமானந்தத்தைச் சொரூபமாக உடைய பரசிவமாக இரண்டறக் கலந்து விளங்குவாயாக.

பரமானந்த மேலீடு என்ற உணர்வு நிலையையும் இறைவனின் கருணையாலே நீங்கி, பரமானந்தச் சொரூபமாக இருக்கின்ற இறைவனைப் பரிபூரணமாகப் பொருந்தி, அந்த இறைவனாகவே இரண்டறக் கலந்து விளங்குவாயாக. (இதுவே (இந்நிலையே) பரமுத்தியின் முடிவு என்று கூறப்படுகிறது)

இந்நிலையே சாயுச்சியமுத்தி (சுத்த அத்துவிதமுக்தி) என்றும் கூறப்படுகிறது. பரசிவ நிலையானது "வெட்ட வெளி" என்றும் கூறப்படும். இந்நிலையில் அனைத்தும் ஒடுங்கித் தன் செயல் அற்று விளங்கும் என்றும் கூறப்படும். இந்நிலையை அடைந்தவர்கள் இந்நிலையில் தோன்றும் உணர்வுகளை வெளிப்படுத்த முடியாமல் அதனுடன் இரண்டறக் கலந்து விடுவார்கள்.

**முக்தி முடிவு உபதேசித்தல்**

௮0. உற்றபர மானந்தத்து ஒன்றாய் அதில்உறங்கி
முற்றுவதே முத்திமுடிவு என்று உரைக்கும் – குற்றம்இலா
வைதிக சைவம் வழிநூல் புராணமற்றுஞ்
செய்வனநூல் எல்லாம் தெளி.

சற்குரு :

மாணவனே! "நீ" பொருந்திய "பரமானந்த மேலீடு" என்ற உணர்வு நிலையில் பொருந்தி, அந்த உணர்வு நிலையில் உறங்கி (தூங்கி (அ) துயில் கொண்டு), அந்த பரமானந்த மேலீடு முற்றுவதே (பரமானந்த மேலீடு என்பது ஒடுங்குவதே) "பரமுக்தி" என்று குற்றமற்ற வைதிக சைவத்தின் (சைவ சித்தாந்த சமயத்தின்) பிரமாணமாகிய சிவாகமங்களும், சிவாகமங்களின் வழி தோன்றிய மற்ற (பிற) நூல்களும், புராணங்களும், புராணங்களின் வழி வந்த நூல்களும் உபதேசிக்கும் என்பதை "நீ" உணருவாயாக.

பரமானந்த போகம், பரமானந்த மேலீடு, பரமானந்த அவசம் ஆகிய மூன்று நிலைகளும் "துரியா தீதம்" எனப்படும். தசகாரியங்களுள் இதனை "சிவபோகம்" என்று கூறப்படும்.

## 29. அணுவகை

(ஆன்மாக்களின் (உயிர்களின்) மூன்று வகையான

இயல்புகளைக் கூறுதல்)

**சிவமே குருவாகி அருளும் எனல்**

81. ஒன்று இரண்டு மூன்றுமலம் உள்ள உயிர் மூவர்க்கும்
சென்று இவன்போல் நேரே சிவம் ஆகி – நின்றநிலை
இவ்வகையே ஆளும் எழிற்குருவாம் ஈசனே
அவ்வகையை நீ அங்கு அறி.

சற்குரு :

மாணவனே! ஆணவமலம் (ஒருமலம்) மட்டும் உடைய "விஞ்ஞான கலர்." ஆணவம் மற்றும் கன்மம் (இருமலம்) உடைய "பிரளயாகலர்." ஆணவம், கன்மம் மற்றும் மாயை (மும்மலம்) உடைய "சகலர்" ஆகிய மூன்று வகையான உயிர்களுக்கும், "முக்திப்பதம்" அருளுவான். அது எவ்வாறு எனில் இறைவன் மானிட (மானுட (அ) மனித) உருவத்தோடு எழுந்தருளி "சகலர்" என்ற மும்மலம் உடைய சீவர்களுக்கு அருள் புரிவான். இருமலம் உடைய "பிரளயாகலர்" களுக்கு சிவவடிவத்தோடு எதிர்ப்பட்டு (எழுந்தருளி) அருள்புரிவான்.

ஒருமலம் மட்டும் உடைய விஞ்ஞான கலர்களுக்கு உயிர்க்குயிராய் பொருந்தியும், அறிவுக்கு அறிவாய் பொருந்தியும், உணர்த்தி அருள் புரிவான்.

இவ்வண்ணம் ஞான சொரூபியாகிய இறைவனே குருவும் ஆகி, உயிர்களை ஆட்கொண்டு, பிறவாவரமாகிய முக்திப் பதத்தை அருளுவார் என்ற இறைவனின் தன்மையை உணர்வாயாக.

இப்பாடலைக் கீழ் கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம்.

விஞ்ஞான கலர், பிரளயா கலர், சகலர் ஆகிய மூன்று வகையான உயிர்களுக்கும், எனது மாணவன் போல சிவமாகிப் பொருந்தி நிற்கும் நிலையை, சிவமே (ஈசனே) குருவாகி அருள் புரியும் தன்மையை அறிவீர்களாக.

விஞ்ஞான கலர்களுக்கு உள்நின்றும், பிரளயா கலர்களுக்கு சிவவடிவமாகவும், சகலர்களுக்கு மனித உருவத்தோடும் வெளிபட்டு "இறைவனே குருவாகி" ஞானத்தை உணர்த்தி, வீடுபேறு (முக்திப்பதம்) அருளுவான் என்பதை உணர்வாயாக என்பது உட்பொருள் ஆகும்.

## 30. பஞ்சாக்கர தரிசனம்

(திருவைந்தெழுத்தையும், அதன் உட்பொருளையும், அதனை ஓதும் முறையையும், அதன் பயன்களையும் கூறுதல்)

### பஞ்சாக்கரத்தின் உட்பொருள் உணர்த்துதல்

82. அஞ்சு எழுத்தும் அண்ணல் அருள் ஆன்மாத் திரோதம்மலம்
மிஞ்சி நமத்துரந்து மெய்யருள் வாத் – தஞ்சத்
சிகாரத்தில் யவ்வைவிடுந் தீதுஇலா இன்பப்
புகாரிற் புகுந்துஅருந்தப் போய்.

சற்குரு :

திருவைந்தெழுத்துக்கள் முறையே "சிகாரம் சிவமாகிய இறைவனையும்", "வகாரம் சிவத்தின் திருவருளையும்," "யகாரம் ஆன்மாவையும் "நகாரம் திரோதான (மறைப்பு) சக்தியையும், "மகாரம் மும்மலங்களையும் உணர்த்துகிறது."

Ano: 19642



திருவருள் மேம்பட்டு நகாரம் என்ற திரோதான சக்தியையும், மகாரம் என்ற மும்மலங்களையும் நீக்கி, இறைவனின் திருவருளாகிய வகாரம் என்பது யகாரம் என்ற உயிர்களை, அந்த உயிர்களுக்கு ஆதாரமாக உள்ள சிகாரம் என்ற சிவத்தோடு (குற்றமற்ற ஆனந்த சொரூபத்தோடு) பொருத்தி, இரண்டறக் கலக்குமாறு அருள் புரியும்.

இப்பாடலை கீழ்கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம்.

"சிவாய நம" என்ற ஐந்து எழுத்துகளும் முறையே

சி - சிவம்
வ - சக்தி (திருவருள்)
ய - ஆன்மா (உயிர்கள்)
ந - திரோதானசக்தி (மறைப்பு சக்தி)
ம - மும்மலங்கள் (ஆணவம், கன்மம், மாயை)

என்பதைக் குறிக்கும் (உணர்த்தும்).

முக்திப்பதத்தை விரும்புபவர்கள் "நமசிவய" என திரோதான சக்தியாகிய நகாரம் மற்றும் மும்மலங்களாகிய மகாரம் முற்பட்டு நிற்க உச்சரிக்காமல் "சிவயநம" என்று உச்சரிக்க வேண்டும்.

'சிவயநம' என்று உச்சரிப்பவர்களை திருவருளாகிய வகாரம், யகாரமாகிய உயிர்களை, சிகாரமாகிய சிவத்துடன் பொருந்துமாறுச் செய்யும்.

'நமசிவய' என்று உச்சரிப்பவர்களை நகாரமாகிய திரோதான சக்தியும், மகாரமாகிய மும்மலங்களும் பிறப்பு மற்றும் இறப்பு என்ற பிறவிச் சுழற்சியில் பொருத்தி விடும்.

## 31. குருத்துதி

(சற்குருவை வணங்குதல்)

**முக்திப்பதம் அருளும் சற்குருவை வணங்குங்கள் எனல்**

83. பற்றிநின்ற பாசம் பறித்து அகலவே விழித்திட்டு
உற்ற உயிர் காட்டி உணர்வு உணர்த்தி – மற்றுஞ்
சிவப்பேறு தந்து சிவபோக வாரி
புகப்பேறு அளித்தவரைப் போற்று.

சற்குரு :

உயிர்களைப் பொருந்தி இருக்கும் ஆணவம், கன்மம், மாயை எனற் மும்மலங்களாகிய "பாசம்" என்ற பந்தம் நீங்குமாறு

“நயனதீக்கை செய்தருளி, நயன தீக்கையினால் சுத்தி பெற்ற உயிர்களுக்கு, அவற்றின் உயிரின் (ஆன்மாவின்) இயல்பை உணர்த்தி, ஞான உபதேசத்தால் ஞானத்தை உணருமாறு உணர்த்தி, சிவப்பேறு என்ற ஆன்ம லாபத்தை உயிர்களானது பெறுமாறு செய்து, சிவயோகமாகிய கடலில் (சிவபோகவாரி) மூழ்கிப் பரமானந்தத்தில் பொருந்துமாறு செய்து, பரசிவமாகுமாறு முக்திப்பதம் என்ற பெறுவதற்கு அரிய பெரும் பயனை அருளிய சற்குருவாகிய (ஞானதேசிகராகிய) சிவத்தை வணங்குவாயாக.”

சிவமே குருவாக வந்து உயிர்களுக்கு முக்திப் பதத்தை உணர்த்தும். ஆகவே குருவாகிய சிவத்தை வணங்குவாயாக என்று உயிர்களுக்கு வலியுறுத்தப் படுகிறது.

## 32. சீடரிலக்கணம்

(சீடனாக இருப்பவனின் இலக்கணம் கூறுதல்)

**சீடர் இலக்கணம் கூறுதல்**

84. இரவுபகல் நிழல்போல் இட்டபணி செய்து
குரவர்புகழ் வாயாரக் கூறித் – திருமுன்
விழுந்துவிழி நீர்பொழிய மெய்விதிர்த்து நின்று
தொழும்தவத்தோர் காணுஞ் சுகர்.

சற்குரு :

இரவும் பகலும் (சதாநேரமும்), உடலும் அதன் நிழலும் போல சற்குருவைப் பிரியாமல் வாழ்ந்து, சற்குருவானவர் கூறும் பணிகளை, சற்குருவின் மனம் நோகாதவாறு பணிவிடைகள் செய்து, சற்குருவின் புகழை (ஞானத்தை) வாயாரப் புகழ்ந்து பிறருக்கு கூறி, சற்குருவின் திருச்சன்னிதானத்தின் முன்பு, நாள்தோறும் வணங்கி, கண்களில் கண்ணீர் மல்க, உடலின் மயிர்க் கால்கள் (உரோமங்கள்) சிலிர்க்க, உள்ளத்தில் சற்குருவை நினைத்து வணங்குகின்ற பெரும் தவத்தை உடையவர்கள் “சீவன் முத்தர்” ஆவார். முக்திப் பதமடையும் (அ) ஞானியாகும் சுகானுபவத்தை (சுக அனுபவத்தை) உடையவர்கள் என்பதை உணருவாயாக.

## 33. முத்தனுக்கு முத்தியின்மை கூறல்

(முக்திப் பயனைப் பெற்றவன் அப்பயனை இழப்பதற்கு

காரணங்கள் கூறுதல்)

**சற்குருவின் உபதேசத்தை நீங்குபவர்கள் முக்திப்பதம்**

**அடையமாட்டார்கள் எனல்**

85. ஆகம்முதல் நீங்கி அருளிற் கலந்துசிவ
போகம் விளையப் புணர்ந்தாலும் - வேகத்து
எரிவாய் நிரயத்து இருப்பார் குருசொற்
பிரிவார் உலகிற் பிறந்து.

சற்குரு :

உடல்பற்று முதலான பற்றுகளை நீக்கி (அ) மும்மலம் நீங்கி, திருவருளோடு பொருந்தி, சிவப்பேறு உணர்வு நிலையை அடைவதால் ஏற்படும் சிவபோகத்தை அனுபவித்தாலும் (அ) சிவபோகம் விளையும் (உணரும்) வண்ணம் சிவத்தைப் பொருந்தினாலும், தனது சற்குருவின் உபதேசத்தை மீறிச் செயல்படும் சீடர்கள், தமது சிவப்பேறு உணர்வையும், திருவருளையும் இழந்து முக்திப்பதம் அடையாமல் மீண்டும் உலகில் பிறப்பெடுத்து வேகமாக எரியும் தீயை (துன்பத்தை) உடைய நரகத்தில் (பிறவிச்சுழற்சியில்) பொருந்துவார்கள்.

## 34. குருவழிபாடே பொருளெனக் கூறுதல்

(குருவை வழிபடுதலே சீடன் அடையும் பெரும் பயன் என்று

உபதேசித்தல்)

**குருவழிபாடே முக்திப்பயன் எனல்**

86. ஆகம்உயிர் பொருள் கொண்டு அன்றே அருள் அளித்துச்
சோகம்எனப் பாவிக்கச் சொன்னாரைத் - தாகத்தோர்
வேண்டும் பொழுதெல்லாம் வேண்டுபொருள் வந்ததுபோற்
பூண்டு தொழல் அன்றோ பொருள்.

சற்குரு :

சீடன் சமர்ப்பித்த (சமர்பணம் செய்த), சீடனின் உடல், உயிர், பொருள் ஆகிய மூன்றினையும் சற்குருவானவர் ஏற்றுக் கொண்டு, அப்பொழுதே ஞான உபதேசம் செய்து (அ) திருவருள் செய்து, சோகம்

(சிவோகம்) என்ற பாவனை (அதுவே நான் (அ) சிவமே நான் என்று பாவித்து நிட்டை (தவம்) பொருந்துவது சிவோக பாவனை) செய்யுமாறு கட்டளையிட்ட சற்குருவை, ஞானம் பெற வேண்டும் என்ற பக்குவ நிலை உடைய சீடர்கள், தாம் விரும்பிய பொழுதெல்லாம் விரும்பிய பொருள் கிடைத்தது போல, சற்குருவின் திருவடிகளை வணங்குவதே முக்தியாகிய பெரும் பயன் என்பதை அறிவாயாக.

## 35. திருமேனியருமை கூறல்

(சற்குருவின் திருமேனியின் பெருமை கூறுதல்)

**இறைவனே சற்குருவாய் எழுந்தருளுவார் எனல்**

87. அன்றுமுத லாகவே ஆருயிர்கட்கு ஆருயிராய்
நின்று அருளும் தம்பிரான் நீங்காமல் - என்றும்
கருவாய்ப் பிறப்பைக் கழற்றினரோ தாமே
குருவாய் அருளாமல் கூறு.

சற்குரு :

உயிர்கள் தோன்றிய காலத்தில் இருந்தே என்றும் உயிர்களுக்கு உயிராக பொருந்தி நின்று, அந்த உயிர்களை விட்டு எப்பொழுதும் நீங்காமல், திருவருளை அருளும் இறைவன் (தம்பிரான்) தானே சற்குருவாய் வந்திருந்து (வந்து) அருள் புரியாமல், தாயின் கருவில் பொருந்திப் பிறக்கும் பிறவியை நீக்க முடியுமோ? - கூறுவாயாக.

இறைவனே மானிட வடிவம் கொண்டு, சற்குருவாய் எழுந்தருளி, உயிர்களின் பிறவிப் பிணியை நீக்கி அருளுவார் என்பது உட்பொருள் ஆகும்.

இப்பாடலைக் கீழ்கண்டவாறு மேலும் விளக்கிக் கூறலாம்.

இறைவன் அகண்ட பரிபூரணமாய் நிற்கும் நிலையிலும், சற்குரு சொரூபமாக எழுந்தருளி உயிர்களின் பிறவிப்பிணியை நீக்குவார். அதாவது, உயிருக்கு உயிராகிய இறைவன் சற்குருவாக மானிடச் சட்டை போர்த்தி வந்து, உயிர்களுக்கு உணர்த்தும் பொழுது மட்டுமே கரு வழியாகப் பிறப்பதை [தாயின் கருவில் தோன்றி (பிறவி எடுப்பதை)] உயிர்களானது நீக்க முடியுமே தவிர, இறைவன்

சற்குருவாய் வந்து உணர்த்தாத பொழுது, கருவோடு பொருந்திப் பிறக்கும் பிறப்பை உயிர்களால் நீக்க முடியாது. ஆகவே, இவ்வண்ணம் தோன்றிய சற்குருவின் திருமேனியை இறைவனின் திருமேனியாக எண்ணி வணங்க வேண்டும்.

## 36. குருவே சிவமென்றல்

(சற்குருவே சிவம் என்று கூறுதல்)

### சற்குருவே சிவம் எனல்

88. பாசம் பசுபதியைப் பாரித்துப் பார்த்தனரே
ஆசில் அகல்அறிவாய் ஆங்குஅகன்று - பேசரிய
ஆனந்தம் பெற்றார் அருட்குருவே ஈசன்என்பர்
மோனமே முற்றும் முயன்று.

சற்குரு :

பாசம், பசு, பதி ஆகிய முப்பொருளின் இயல்புகளைச் சிந்தித்து (பாரித்து) உணர்ந்தவர்களின் அறிவானது, குற்றமற்ற அகண்ட பரிபூரண ஞானமாய் (பரஞானமாக) வியாபகம் அடைந்து, மோனநிலையில் இருக்கும் தவத்தை முழுமையாகப் பொருந்தி, வார்த்தைகளால் விவரித்துக் கூறுவதற்கு கடினமாக பேரானந்தத்தைப் பொருந்தி உணருவார்கள். தமக்கு ஞானத்தை உணரும் வண்ணம் உபதேசம் செய்த அருட்குருவே (பெருங்கருணை உடைய சற்குருவே) "சிவம்" என்று கூறுவார்கள்.

பதி, பசு, பாசம் ஆகியவற்றின் இலக்கணங்களை உணர்ந்து வியாபகமான (அகண்ட) ஞானத்தைப் பெற்று, மோன நிலை பொருந்தி, பேரின்பம் பெற்றவர்கள் "குருவே சிவம்" என்று கூறுவார்கள் என்பது உட்பொருள் ஆகும்.

## 37. குரு பணி செய்வாரை வழிபடுதல்

### சற்குருவின சீடர்களைச் சார்பவரும் பிறவித் துன்பம் நீங்குபவர் எனல்

89. கருவேலை தன்னைக் கடப்பர் உலகில்
மருவாத இன்பத்துள் வைத்து - குருவின்
அடியார் அடியார் அடியார் அடியார்
அடியாரைச் சார்ந்த அவர்.

சற்குரு :

இந்த உலகில் அடைவதற்கு மிகவும் கடினமான பேரின்ப (பரமானந்த) அனுபவத்தில் பொருந்தி, சீவன் முத்தன் (ஞானி) நிலையை, தம்மைச் சரணடைந்த சீடர்களுக்கு உணர வைத்த சற்குருவின், சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நெறி முறைகளைச் சார்ந்த அடியார்களையும் (சீடர்களையும்), இத்தகைய அடியார்களைச் சார்ந்து பணிவிடை செய்யும் அடியார்களையும் (சீடர்களையும்), சார்ந்துப் பணிவிடை செய்பவர்கள் பிறவிப்பிணியை (இனி தாயின் கருவில் பொருந்திப் பிறப்பெடுப்பதை) நீக்குவார்கள் அல்லது பிறவி என்னும் பெருங்கடலை நீந்திக் கடப்பார்கள்.

ஞானத்தை உணர்த்தும் சற்குருவின் அடியார்களைச் சார்ந்தவரும் ஞானம் பெற்று பிறவாவரம் பெறுவர் என்பது உட்பொருள் ஆகும்.

## 38. யோகம்

(யோக நெறிமுறைகள் உபதேசித்தல்)

**வாசி யோகம் கூறுதல்**

90. சன்மார்க்கம் ஈதாம் சகமார்க்கம் சாற்றுங்கால்
பன்மார்க்கம் வாயுப் பகர்கருவி - தன்மார்க்கஞ்
சால ஒடுக்கித் தடுத்து வளிஇரண்டும்
மால்அறவே நிற்கை மகிழ்ந்து.

சற்குரு :

இதுவரை (அத்தியாயம் 1 முதல் அத்தியாயம் 37 வரை) கூறப்பட்டது (உபதேசிக்கப் பட்டது) ஞானநெறி (அ) ஞானமார்க்கம் என்று கூறப்படும் "சன்மார்க்கம்" ஆகும்

யோக மார்க்கம் (அ) யோகநெறி என்று கூறப்படும். "சகமார்க்கம்" என்பதன் இலக்கணத்தை (இயல்புகளை) ஆராய்ந்து கூறும் பொழுது அஃது அட்டாங்க யோகம் முதல் பல வகையான நெறிமுறைகளை (பன்மார்க்கம்) உள்ளடக்கியது ஆகும். உடலில் மூக்கின் (நாசியின்) வழியே இயங்கும் பிராண வாயுவை (சுவாசத்தை) தன் வசப்படுமாறு நன்கு ஒடுங்கச் செய்து இடைகலை, பிங்கலை என்னும் இரு கலைகளில் இயங்கும் உள்மூச்சு மற்றும்

வெளிமூச்சு ஆகிய இரண்டையும் தடுத்து, அஞ்ஞான மயக்கம் நீங்கி, தியானிக்கப்படும் பொருளில் பொருந்தி நின்று, அதனால் பெறும் இன்பத்தை அனுபவித்து மகிழ்வது ஆகும்.

இதனை "வாசியோகம்" என்று கூறலாம். வாசி யோகத்தால் பிராண வாயுவை தன் வசப்படுத்தி ஒடுக்கும் பொழுது "மனம், வாக்கு, செயல்" ஒடுங்கி (அ) தத்துவக் கருவிகள் ஒடுங்கி, தியானிக்கப் படும் பொருளாகிய இறைவனுடன் பொருந்தி, அதனால் ஏற்படும் பேரின்ப உணர்வை உணர்ந்து, அஞ்ஞான மயக்கம் நீங்கி, அந்த இறைவனுடன் கூடி நிற்பது ஆகும்.

### உடலானது ஒளியாகும் தன்மை கூறுதல்

91. அந்த மனத்தாலே ஆதாரம் ஆறினையும்
சந்தித்து அதிற்பொருள்கள் தான் அறிந்திட்டு – இந்துவிலே
ஓவா ஒளிவைத்து உருகும் அமுது உள்நிறைக்கில்
ஓவா ஒளியாம் உரு.

சற்குரு :

வாசி யோகத்தால் ஏற்பட்ட அஞ்ஞான மயக்கம் நீங்கிய அறிவால், மூலாதாரம், சுவாதிட்டானம், மணிப்பூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை (ஆக்கினை) என்ற ஆறு ஆதாரங்களையும் உணர்ந்து, அந்த ஆறு ஆதாரங்களின் அதிதெய்வங்களாகிய விநாயகர், பிரம்மா, திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் ஆகிய சிவசொரூபங்களையும், தரிசித்து உணர்ந்து, உயிர்களிடத்தில் எப்பொழுதும் நீங்காமல் மூலாதாரத்தில் இருக்கும் (விளங்கும்) ஒளியை, சுழுமுனை நாடி வழியே மேல் நோக்கிக் கொண்டு சென்று விந்து தானம் எனப்படும். புருவமத்தியில் சேர்த்து விட்டால் அந்த விந்து தானத்தில் இருக்கும் மதியமுது பெருகும். அந்த மதி அமுதத்தை உடம்பினுள் பரிபூரணமாக நிறைத்தால் உடலானது என்றும் அழியாத ஒளி வடிவமாகும்.

மூலாதாரத்தில் விளங்கும் ஒளியை மூலாதாரசக்தி என்றும் குண்டலினி சக்தி என்றும் கூறுவர். அந்த ஒளியை வாசியோகத்தால் சுவாதிட்டானம், மணிப்பூரகம், அனாகதம், விசுத்தி ஆகிய ஆதாரங்களின் வழியே சுழுமுனை நாடி மூலம் மேல்நோக்கிக்

கொண்டு சென்று, புருவமத்தியில் இருக்கும் ஆக்கினை என்னும் ஆதாரத்தில் அந்த ஒளியைச் சேர்க்கும் பொழுது மதியமுது பெருகும். அந்த மதியமுதத்தை உடம்பு முழுவதும் பூரணமாக பரவச் செய்தால் உடம்பானது என்றும் நீங்காத ஒளி வடிவமாகும்.

**சிவவடிவம் பெறும் வகை கூறுதல்**

92. நின்ற ஒளிஉருவின் நீங்காமல் நிற்கவே
என்றும் அழியாமல் இன்புற்றுக் – கொன்றையந்தார்த்
தாணுஉருப் போலேபின் சாரூப் பியத்திலே
மாணவக வாழ்வாய்காண் மற்று.

சற்குரு :

வாசியோகத்தால் பொருந்திய ஒளி வடிவத்தை விட்டு நீங்காமல் இருந்து, உடலானது என்றும் அழியாத இன்பம் பெற்று, சிவத்தின் திருமேனியைப் (சொரூபத்தைப்) போன்று பிரகாசித்து சாரூப்பிய முக்திப்பத்தில் வாழ்வாய். இதனை (இந்நெறி முறையை) மாணவனே அறிவாயாக.

(சாரூப்பியம் (சாரூபம்) என்பது சிவ வடிவத்தைப் பெற்று, சிவலோகத்தில் வாழ்வது ஆகும்.)

## 39. கிரியை

(கிரியை நெறி முறைகளை உபதேசித்தல்)

**கிரியை வழிபாட்டு முறையைக் கூறுதல்**

93. புத்திர மார்க்கம் புகைஒளி மஞ்சனம்பூ
வைத்துஅமுது தாம்பூலம் மற்றெவையும் – உத்தமமாய்த்
தேடிவைத்துப் பின்னைச் சிவபூசை செய்வதற்கு
நாடுஅவத்திற் செல்லாமல் நாள்.

சற்குரு :

புத்திரமார்க்கம் (கிரியை) என்பது தூபம் (நறுமணப் புகை) தீபம் (ஒளி), தீர்த்தம் (மஞ்சனம்), பூக்கள், திருஅமுது ஆகிய இவைகளைப் படைத்து, தாம்பூலம் (வெற்றிலை, பாக்கு போன்றவை) முதலிய சிவபூசைக்கு வேண்டிய பொருட்கள் அனைத்தையும் உத்தமமான (உரிய) முறையில் தேடி வைத்துக் கொண்டு, பின்னர் சிவபூசை செய்ய வேண்டும். உன்னுடைய வாழ்

நாட்கள் வீணாகக் கழிந்து போகாமல், சிவத்தின் திருமேனியைப் பொருந்துவதற்காக, சிவபூசையை நாள்தோறும் ஆத்மார்த்தமாக மற்றும் குற்றங்குறை எதுவும் இல்லாமல் விரும்பிச் செய்வாயாக.

சிவபூசையை மேற்கூறிய வண்ணம் அகத்தாலும் (அகபூசையாகவும்) அல்லது புறத்தாலும் (புற பூசையாகவும்) நாள்தோறும் உரிய நெறிமுறையில் செய்வதே கிரியை எனப்படும் புத்திர மார்க்கம் ஆகும்.

**சிவத்திருமேனியை காணும் வகை கூறுதல்**

94. சுத்திஐந்து செய்து துகள்தீரும் மந்திரத்தால்
அத்தம் அது பத்துமுகம் ஐந்தாக - வைத்து வைத்து
வித்தியா தேகம் விதிப்படியிற் தாபித்துப்
பத்தியால் மேனிதனைப் பார்.

சற்குரு :

1.பூதசுத்தி 2.தானசுத்தி 3.திரவியசுத்தி 4.மந்திரசுத்தி 5.இலிங்க சுத்தி எனப்படும் ஐந்து வகையான சுத்திகளை (தூய்மைகளைச்) செய்து (அல்லது) 1.பூதப்பழிப்பு 2.பொறியற உணர்தல் 3.அந்தகரண சுத்தி 4.கலாதிஞான நிராகரணம் 5.சுத்த தத்துவ தூடணம் என்ற முற்கூறிய ஐந்து (பஞ்ச) சுத்திகளைச் செய்து, அஞ்ஞானத்தை நீக்கும் பஞ்சாக்கர (அ) திருவைந்தெழுத்து மந்திரத்தால் (துகள் தீரும் மந்திரத்தால்) தியானித்து, சிவத்தின் ஐந்து திருமுகங்களுக்கும் இரண்டிரண்டு திருக்கரங்கள் உடையதாக அதாவது ஐந்து திருமுகங்களும் பத்து திருக்கரங்கள் உடையதாக உருவகித்து, சிவாகம நெறிமுறைப்படி சிவத்தின் வித்தியா (ஞான) தேகத்தை (சொரூபத்தை) தியானத்தில் ஸ்தாபித்து, இறைவனாகிய சிவத்தின் திருமேனியை உணரும் வண்ணம் பத்தியோடும் பேரன்போடும் காண்பாயாக.

பஞ்ச சுத்திகள் செய்து, சிவத்தின் திருமேனியை ஐந்து முகங்களும், பத்து கைகளும் உடையதாக உருவகித்து (அ) பாவனை செய்து பஞ்சாக்கர மந்திரத்தை முறைப்படி செபித்து, சிவத்தின் திருமேனியை மெய்யாக உணருதல் வேண்டும் என்பது உட்பொருள் ஆகும்.

### சிவபூசை தொடங்கும் நெறி கூறுதல்

95. பார்த்ததிரு மேனிப் படிகந் தனிற்பரனைச்
கோத்ததிரு மந்திரத்தால் கொண்டு வந்து - பார்த்து அருளச்
சொல்லிப் பராக்கு அறுத்துச் சோதிச் சிவஆகமத்தின்
சொல்லின் படியே தொடங்கு.

சற்குரு :

மேற்கூறியவாறு தியானத்தால் உருவகப் படுத்திய ஐந்து முகங்கள் மற்றும் பத்து கரங்கள் உள்ள திருமேனியை (ஸ்படிகம் போன்ற திருமேனியை), பஞ்சாக்கரம் என்ற திருவைந்தெழுத்து மந்திரத்தால் அர்ச்சித்து, அந்தச் சிவத்தின் திருமேனியைத் தியானத்தில் பொருத்தி, சிவத்தின் (இறைவனின்) திருக்கடைக்கண் பார்வையை (அல்லது) திருவருளை தன் மீது செலுத்துமாறு விண்ணப்பம் செய்து, சிவமானது தன் மீது பொருந்தும் உணர்வை தியானத்தால் ஒருமுகப்படுத்தி உணர்ந்து, சோதி (பேரொளி) சொரூபமாகிய இறைவனால் அருளப் பெற்ற சிவாகமங்கள் கூறிய நெறிமுறைப்படி சிவபூசையை தொடங்குக.

### 96. சிவபூசையால் முத்திப்பதம் அடையலாம் எனல்

96. சோராமல் பூசித்துச் சொன்னபடி நில்இதழித்
தாரார் சமீபத்தில் தான் இருந்து - வாராமல்
தானே பரன் அளிக்குஞ் சங்கரனார் இம்முத்தி
தானே தரினுந் தரும்.

சற்குரு :

மேற்கூறியபடி சோர்வில்லாமல் (தளராமல்) "சிவாகமங்கள்" கூறிய நெறிமுறைப்படி சிவபூசையைச் செய்து கிரியை நெறியில் பொருந்தி இருப்பாயாக.

சிவபூசையில் பரிபூரணமாகப் பொருந்தினால் சிவத்தின் அருகில் இருக்கும் உணர்வு நிலையைப் பெறுவாய். இந்த உணர்வு நிலையில் சிவமானது உன்னுடைய பிறவித் துன்பத்தை நீக்கி, என்றும் தன்னருகில் இருக்கும் சாமீப்பிய (சாமீபம் என்னும்) முத்தியை தந்தருளும்.

மேலும் சிவமானது பரமுத்தியாகிய சாயுச்சிய முத்தியையும் கூட தந்து அருளும்.

சிவபூசையை ஆகம விதிப்படி செய்யும் பொழுது, ஆன்ம சொரூபத்தை உணருவதன் மூலம் சிவசொரூபத்தை உணரலாம். இந்நிலையில் சிவத்தோடு பொருந்தும் சிவயோக நிலையைப் பெற்று, சிவ போகத்தை அடைந்து, பரமானந்தத்தில் பொருந்த முடியும் என்பது உட்பொருள் ஆகும்.

## 40. சரியை

(சரியை நெறிமுறைகளை உபதேசித்தல்)

### சரியை நெறிமுறை கூறுதல்

97. தாதமார்க்கம் சாற்றில் சங்கரனார் இன்புற்ற
பூதி தருவேடம் போற்றியே – நீதியினாற்
பூங்காவனம் சமைத்துப் பூமாலை புண்ணியற்குப்
பாங்காக செய்கை பரிந்து.

சற்குரு :

தாதமார்க்கம் என்று கூறப்படும். "சரியை" மார்க்கம் என்பது சிவத்திற்கே இன்பத்தைத் தரும். விபூதி, உருத்திராக்கம், (உருத்திராட்சம்) போன்றவற்றைத் தரித்து, இத்தகைய திருவேடம் தாங்கியவர்களையும் வணங்கி, நெறிமுறைப்படி பூங்காவனம் அமைத்து (உண்டாக்கி), சிவலிங்கத்திற்கு பூக்களை மாலையாகத் தொடுத்து, பேரன்போடு அழகு தரும் வண்ணம் சூட்டுவது ஆகும்.

இத்தகைய சரியை நெறிமுறையை புறபூசையாகவும் மற்றும் அகபூசையாகவும் செய்யலாம்.

### சரியை நெறி பொருந்தும் அடியார்களின் பணி கூறுதல்

98. அலகு திருமெழுக்கிட்டு ஆலயத்தில் அன்பாய்
இலகு திருவிளக்கும் ஏற்றிப் – பலகாலும்
சென்று வணங்கித் திருவடிவு ஆரஞ்சேர்த்தி
நின்றிடுகை தொண்டர்பணி நேர்.

சற்குரு :

திருக்கோயிலுக்குச் சென்று, இறைவன் மீது பேரன்புடன், திருக்கோயிலை மெழுகிச் சுத்தம் செய்து, திருவிளக்குகளைச் சுடர்விட்டு எரியச் செய்து, இறைவனுக்குப் பூமாலைகள் சாத்தி, நாள்தோறும் இவ்வண்ணம் ஆகமநெறிமுறைப்படி இறைவனை

வணங்கும் சரியை நெறியைப் பொருந்தி, சிவனடியார்களுக்கும் பணிவிடைகள் செய்து விளங்குவது சரியைக் கடைபிடிக்கும் தொண்டர்களின் (அடியார்களின்) பணியாகும். மாணவனே! நீ இதனை உணர்ந்து கடைபிடித்து விளங்குவாயாக.

**சரியை நெறியாலும் முக்திப்பதம் பெறலாம் எனல்**

99. கொன்றையந்தார் வேணியற்குக் கோயில் பலசமைத்துப்
பொன்றியவை முற்றும் புதுக்குவித்து – நின்றார்
அவலோகந் தன்னில் அடையார் அடைவர்
சிவலோகந் தன்னிற் சிறந்து.

சற்குரு :

சிவலிங்கத்திற்கு (சிவசொரூபத்திற்கு) கோயில்கள் பலவற்றைக் கட்டி (உண்டாக்கி), பழுதடைந்த சிவாலயங்களை முழுவதும் புதுப்பித்து, சரியை நெறி முறையில் பொருந்தியிருப்பவர்கள், பிறவிகளை உருவாக்கும் வினைகளை தோற்றுவிக்கும் அவலோகத்தில் மீண்டும் பிறந்துத் துன்பங்கள் அடைய மாட்டார்கள். சிவலோகத்தை (முக்திப்பதத்தை) சிறப்புடன் பொருந்துவார்கள் என்பதை அறிவாயாக.

சரியை நெறியில் பொருந்தியவர்கள் அடையும் முத்திப்பதம் “சாலோகம்” என்று கூறப்படும்.

**நூற்பயன் கூறுதல்**

100. அந்த மலம் அறுத்து இங்கு ஆன்மாவைக் காட்டி அதற்கு
அந்த அறிவை அறிவித்தது இங்கு – அந்த அறிவை
மாறாமல் மாற்றி மருவுசிவப் பேறு ஒன்றுங்
கூறாமல் கூறக் கொடி.

சற்குரு :

ஆன்மாக்கள் (உயிர்கள்) தோன்றிய நாளில் இருந்தே உயிர்களைப் பொருந்தியிருக்கும் ஆணவ மலத்தையும், அதன் வழிவந்த கன்மம், மற்றும் மாயை என்னும் இரு மலங்களையும் நீக்கி (ஆக மும்மலங்களை நீக்கி), இந்த நிலையில் ஆன்ம சொரூபத்தை உணர்த்தி, ஆன்ம சொரூபத்தை உணரும் பொழுது மெய்ஞானத்தை அனுபவ வாயிலாக உணர்த்தி, மெய்ஞானத்தை

(பதி ஞானத்தை) உணர்ந்த நிலையில் பாச அறிவு மற்றும் பசு அறிவு ஆகிய இரண்டும் மீண்டும் உயிர்களைப் பொருந்தாதவாறு மெய்ஞானத்தை (பதி அறிவை) நிலை நிறுத்தி, ஆன்மாவானது நீங்காமல் அனுபவிக்கும் சிவபோகத்தை அனுபவ வாயிலாக உணர்த்துவதற்கு இந்த நூல் பயன் தரும்.

சாக்கிரம் என்ற நிலையில் உள்ள பதிமூன்று உணர்வு நிலைகளையும், சொப்பனம் மற்றும் சுழுத்தி என்ற நிலையில் உள்ள எட்டு உணர்வு நிலைகளையும், துரியம் மற்றும் துரியா தீதம் என்ற நிலையில் உள்ள ஒன்பது உணர்வு நிலைகளையும், அனுபவ வாயிலாக உணர்த்துவதற்கு இந்த நூல் பயன் தரும் என்பது உட்பொருள் ஆகும்.

– சுபம் –



# துகளறு போதம் உட்பொருள்

சுத்த, கேவல, சகல நிலைகளும், தசகாரியங்களும், பரமுத்திவரை தோன்றும் உணர்வு நிலைகளும்

பரம்பரம் — [ வெட்ட வெளி நாதம் ]

↑

பராபரம் — [ பராபர நாதம் / பராபர விந்து ]

↑

பரமம் — [ பரம நாதம் (பரம சிவம்) / பரம விந்து (பரம சக்தி) ]

↑

[ சற்குரு மகரிஷி ஈஸ்வரபட்டா உணர்த்தும் சத்தியத்தின் சக்தி நிலை ] — பரம முக்தி நிலை மற்றும் வியாபக அறிவும் நீங்குதல்

| | | |
|---|---|---|
| 28-30 துரியாதீதம் 10. சிவபோகம் | 30. பரமானந்த அவசம் | (பரமானந்தத்தில் தன் செயல் அற்று பரசிவமாய் ஒடுங்குதல்) |
| | 29. பரமானந்த மேலீடு | (அனைத்தையும் ஆனந்த (பரசிவ) சொரூபமாக உணருதல்) |
| | 28. பரமானந்த போகம் | (பரமானந்த அனுபவம்) |
| | ↑ | |
| 22-27 துரியம் 9. சிவயோகம் | 27. பரமானந்த யோகம் | (பரமானந்தத்தில் பொருந்தி, பரசிவமாய் விளங்குதல்) |
| | 26. பரமானந்த தரிசனம் | (பரபோகமாகிய பரமானந்தம் உணருதல்) |
| | 25. சிவப்பேறு | (சிவோக உணர்வு, தாடலை போல் பரசிவத்தோடு நீங்காமல் நிற்கும் நிலை) |
| | 24. சுகாதீதம் | (சுபரூபம் நீங்கி, சுகாதீதமும் நீங்குதல்) |
| | 23. சுகரூபம் | (சுகசோதி தோன்றுதல், பரசிவமானது நம்முடன் கலந்து இயங்குதல் மற்றும் பரசுகம் தோன்றுதல்) |
| | 22. சுத்தாவத்தை | (பரசிவத்தோடு பொருந்தி, பரசிவஞானத்தை முற்றுணர்தல் மற்றும் சுத்த நிலை அடைந்து மும்மலங்கள் பூரணமாய் நீங்குதல் |
| | ↑ | |
| 18-21 சுழுத்தி நிலை 7. ஆன்மசுத்தி 8. சிவதரிசனம் | 21. பரையில் அதீதம் | (சாத்திராதீதம் நீங்குதல் பரசிவ ஞானம் பூரணமடைந்து பரசிவத்துடன் பொருந்தக் கூடிய நிலை |
| | 20. சாக்கிராதீதம் | (பரை ஞானத்தை விட்டு நீங்குதல்) |
| | 19. முத்திச் சாக்கிரம் | (பரசிவ ஞானத்தில் பொருந்தி உணருதல்) |
| | 18. சுத்த பராயோகம் | (பரைஞானத்தில் இருந்து கொண்டே பரசிவ ஞானத்தில் ஒடுங்குதல், ஆன்மசுத்தி பெற்றுபரசிவத்தை தரிசித்தல்) |

30–22: (பரநாதம்) (பரசிவம்) பரநாத தத்துவ வியாபகம்

21–18: (பரசக்தி) வியாபகம்

30–18: வியாபகம் அடைதல் (அறிவின் வியாபகம்)

தத்துவங்களோடு கூடிய அறிவு, தத்துவங்கள் படிப்படியாக நீங்கி,

| | | | |
|---|---|---|---|
| 14-17 சுத்த அவத்தையில் சொப்பனம் | 17. பரையில் போதம் | (பரை போகத்தை உணருதல் மற்றும் அனுபவித்தல்) | பரைவிந்து (பரைவிந்து) |
| | 16. பரையில் யோகம் | (பரையில் பொருந்தி தன் செயலற்று இருத்தல்) | |
| | 15. பரையில் வியாத்தம் | (பரை ஞானத்தில் ஒடுங்கி மோனநிலை தோன்றுதல்) | |
| 5. ஆன்மதரிசனம் 6. சிவரூபம் | 14. பரை தரிசனம் | (பரசக்தி உணருதல் மற்றும் அருட்சக்தியால் விளைந்த மெய்ஞானம் என்ற ஆன்ம போத அறிவு படிப்படியாக பரை ஞானத்தில் ஒடுங்குதல்) | |
| | ↑ | | |
| 1-13 சுத்த அவத்தையில் சாக்கிரம் | 13. ஞான தரிசனம் | (அருட்சக்தியால் மெய்ஞானம் உணருதல்) | நாதத்தத்துவ வியாபகம் |
| | 12. சைத்தன்னிய தரிசனம் | (சுத்த நிலை உணருதல்) | |
| | 11. தன் உண்மை | (மும்மலம் நீங்கி திரோதான சக்தி உணர்தல்) | |
| (ஆன்ம போத நிலை) | 10. கேவலாதீதம் | (கேவல நிலை நீங்குதல்) | |
| | 9. கேவல தரிசனம் | (கேவலத்தை முற்றுணர்தல்) | |
| | 8. கேவலம் | (அருட்கேவல நிலை உணர்தல்) (ஆணவ மலம் மட்டும் உடையது) | |
| 1. தத்துவ ரூபம் | 7. சகல தரிசனம் | (சகல நிலையில் வேறுபாடு அறிதல் முத்திச்சகலம், பெத்தசகலம்) | |
| 2. தத்துவ தரிசனம் | 6. தத்துவாதீதம் | (தத்துவங்களில் இருந்து நீங்கிய நிலை ஆறு அத்துவா, 36 தத்துவங்கள், கன்மம், மாயை நீக்கம்) | |
| 3.தத்துவ சுத்தி | ↑ | | நாதம் |
| 4. ஆன்ம ரூபம் உணரும் நிலை | பஞ்ச சுத்தி: 5. சுத்த தத்துவ தூடணம் | (சுத்தமாயை தத்துவங்கள் நீங்குதல்) | விந்து — விந்து தத்துவ வியாபகம் |
| | 4. கலாதி ஞான நிராகரணம் | (அசுத்தமாயை தத்துவம் நீங்குதல்) | சதாக்கியம் (சதாசிவம்) |
| | 3. அந்த கரண சுத்தி | | |
| | 2. பொறியற உணர்தல் | (ஐம்பொறி மற்றும் புலன்கள் நீங்குதல்) | ஈசுவரம் |
| | 1. பூதப்பழிப்பு | (பஞ்சபூதங்கள் நீங்குதல்) | சுத்தவித்தை |



ஸ்ரீமத் சிற்றம்பல நாடி சுவாமிகளின் ஜீவசமாதி கருவறை


தொகுப்பாசிரியரின் சற்குருநாதர்
**மகரிஷி ஈஸ்வர பட்டா**

தொகுப்பாசிரியர் **மரு. இராமசிவா** அவர்களின் சற்குருநாதர் மகரிஷி ஈஸ்வர பட்டா சுவாமிகள் ஆவார். அவர் கர்நாடக மாநிலம் மங்களூர் அருகில் உள்ள ஈஸ்வரமங்களத்தில் அவதரித்தார். இறையருளால் சிறுவயதிலேயே மெய்ஞானத்தை பெற்று பல சித்துகளை புரிந்து இறுதியில் 4.1.1970 அன்று பழநியில் ஜீவசமாதி அடைந்தார்.

சற்குரு நாதர் காரண காரியங்களுக்காகவே பல உயிர்களை கடைத்தேற்றும் பொருட்டு இன்றும் உருவ, அருவ, அருவுருவமாகத் தோன்றி அடியவர்களுக்கு உபதேசம் செய்து வருகிறார்கள். சற்குருநாதரின் உபதேசம் வாயிலாகவே இந்த **"துகளறு போதத்தை" மரு.இராமசிவா** அவர்கள் அருளிச் செய்துள்ளார்கள்.


தொகுப்பாசிரியர்
**மரு. இராமசிவா**

உயிர்களானது அஞ்ஞானத்தின் வலிமையால் மீண்டும் மீண்டும் பிறவி சுழலில் உழல்கின்றன. இந்த நிலை மாற இறையருளால் குருஅருளை வேண்டி திருவருளின் துணையால் சந்நிதிபாதம், இருவினை ஒப்பு மற்றும் மலபரிபாகம் அடைதல் வேண்டும். இந்த ஞானத்தை அருளுவதே "துகளறு போதத்தின்" உட்பொருள் ஆகும்.

ஆசிரியர் **மரு.இராமசிவா** அவர்களின் பிற நூல்கள் :

1. சித்தாந்த சிவஜீவ ஐக்கிய இரகசியம், 2. ஒழிவில் ஒடுக்கம், 3. ஔவையின் குறள் சித்தாந்தம், 4. வாகீசமுனிவரின் ஞானாமிர்தம், 5. சிவநெறிப் பிரகாசம் போன்றவைகள் ஆகும். அன்னாரின் மேலும் பல நூல்கள் வெளிவர எல்லாம் வல்ல இறைவனையும், குருவருளையும் வேண்டி பிரார்த்திக்கின்றோம்.

இவண் **இறை ஒளி நாகேந்திரன்**
தத்போதம் பத்திரிக்கை குழுமம்.